

**என்னின் முதலாழ்வார்கள் மூன்று நூலும்**
எழில்மசைப் பிரானிருநூற்றொரு பத்தாலும்
உண்மை மிகுமாறன் மறையாயிரத்தோடு
உற்ற இருநூற்றுத் தொண்ணூறுமாறும்

வண்மையுடை மதுரகவிபத்து மொன்றும்
வஞ்சியர்கோன் நூற்றைந்தும், பட்டநாதன்
பண்ணியல் நானூற்றேழுபத்து மூன்றும்
பார்க்கோதை நூற்றேழுபத்து மூன்றே.

பத்தரடிப்பொடிபாடலைம்பத்தைந்தும்
பாணர்புகல் பத்துடனேபரகாலன் சொல்
அத்தனுயர் வேங்கடமாற்காயிரத்தோடு
ஆன இருநூற்றேரைம் பத்துமூன்றும்

முத்தி தருமெதிராசர் பொன்னடிக்கே
மொழிந்தவமுதற்பாடல் நூறுமட்டும்
எத்திசையும் வாழுவிவர் பாடிவைத்த
இவை நாலாயிரமுடியோங்கள் வாழ்வே.

-பிரபந்தஸாரம்-ஸ்ரீஸ்வாமிதேசிகன்

# ஸப்தகிரி

நவம்பர்-1991


தனிப்பிரதி ரூ. 1 மலர் 22
வருடச்சந்தா ரூ. 12 இதழ் 6


## உள்ளுறை

பக்கம்



அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை : அருளொளிப் பெருமான் திருமலையான்.

பின்னட்டை : 'நாக சதுர்த்தி' பண்டிகை
சித்திரம்: மாஸ்ரீ.

2 மற்றும் 3-வது அட்டைகளில் : இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர் டாக்டர் எஸ். சங்கர் தயாள் சர்மா அவர்களும், இந்திய உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி மற்றும் ஆந்திர மாநில ஆளுநர் அவர்களும் அண்மையில் திருமலைக்கு வருகை புரிந்த போது.


சிறப்பாசிரியர் :
திரு. எம்.வி.எஸ். பிரஸாத், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


JAGADISH

# உங்களுடன்...

கண்முன் புலப்படும் மனிதன், மிருகம், பறவை, மரஞ் செடி கொடிகளும், கண்ணுக் குத் தெரியாத நுண்கிருமிகளும், கண்கள் அறியாத கல்லுக்குள் வாழ்ந்திடும் தேரையும், நீருக்குள் வாழ்ந்திடும் நீர் வாழ் பிராணிகளும் ஆகியனயாவும் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் எனும் ஐம்பூதங்களின் சேர்க்கையினால் ஆனவையாகும். உயிர்களுள் மனிதன் மட்டும், தான் தோன்றக்காரணமான ஐம்பூதங்களையும் அடக்கி ஆளவே விரும்புகின்றான். தவம், யாகம் புரிந்து மெய்ஞ்ஞானம் கொண்டு மேலுலகம் காண ஆன்றோர் முயன்ற போது, விஞ்ஞானத்தின் உதவியுடன் இன்றைய மனிதன் விண்வெளி சாதனங்களைக் கொண்டு விண்ணை ஆள விரும்புகின்றான். பெருகிவரும் நீரினைக் கண்டு அஞ்சி ஓடாமல் தடுப்புகளைக் கொண்டு வீடுகளைக் கட்டி தன்னைக் காப்பாற்றிக் கொண்டும், அணைகள் கட்டி, ஏரி அமைத்து அந்நீரினைப் பயன் படுத்தவும் தெரிந்து கொண்டான். மரஞ்செடி கொடிகளை வேரோடுத் தூக்கியெறியும் காற்றினை - புயலினைக் கண்டு பயந்து நடுங்கா மல் அதன் தீவிரத்தை, அதன் பாதையை முன்கூட்டியே தெரிந்து கொண்டும், அதனால் ஏற்படும் விளைவுகளைக் கட்டுப்படுத்தவும் தெரிந்து கொண்டான். எதனையும் உருக்கி டும், சாம்பலாக்கிடும் நெருப்பினைக் கண்டு நிலைகுலைந்திடாமல் அதனை அணைக்கவும், அதன் வெப்பத்திலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளவும் அறிந்து கொண்டான். இவ் வாறாக ஐம்பூதங்களையும் தன் கையகப்படுத்திக்கொள்ளவே மனிதன் விழைந்தான், அதில் சிறிது வெற்றியும் பெற்றான்.

ஆனால் இந்த ஐம்பூதங்களையும் பயன்படுத்திக்கொள்ள முனைந்த அவன், அதற்கான முயற்சிகளை இம்மண் மீது வைத்தே மேற்கொள்ள முடிந்தது. விண் மீது மிதந்தாலும் இறுதியில் மண் மீது வந்து இறங்குவது என்பது தவிர்க்க முடியாத ஒரு செயலாகும். நீர், நெருப்பு, காற்று ஆகியவற்றின் அழிவுகளிலிருந்து அவன் தன்னை இம்மண் மீது இருந்தே காப்பாற்றிக்கொள்ள முடிந்தது. ஆனால் அம்மண்ணே அசைந்தால் அவன் நிலை என்ன? அதன் அசைவினை முன்பே அறிந்து, அதன் அசைவினால் ஏற்படும் பேரழிவுகளிலிருந்து தன்னை எந்த வகையிலும் காப்பாற்றிக் கொள்ள முடியாத நிலை யைப் பார்க்கும் போது மனதனின் இயலாமை மட்டுமின்றி, மரணத்தின் வெற்றியை - இயற்கையின் வலிமையையும் அறிகின்றோம். பூமி நிலைகுலைந்திடும் போது மனிதன் தன் அறிவாலும், ஆற்றலாலும் அமைத்திட்ட வானளாவிடும் கட்டிடங்களும், கடலையே தடுத்திடும் தடுப்புகளும், புயலே தாக்காத குடியிருப்புகளும் இருந்த சுவடு தெரியாது அழிந் திடும் போது, மனிதனின் நம்பிக்கைகளுக்கும், ஆற்றல்களுக்கும் பொருளில்லாது போய் விடுகின்றது. இந்நிலையில்தான் மனிதன் இயற்கையின் பேராற்றலை எண்ணி வியந்து அஞ்சுகின்றான். இதுபோது, நாளை தமக்கு ஒரு நல்ல பொழுதாக புலரவே, அதற்கான ஒரு நம்பிக்கை தனக்குள் ஏற்படவே, கடவுள் ஒருவன்தான் தனக்கு இறுதிப்புகலிடம் என்று உணர்ந்து அவனையே நாடுகின்றான். அதுவே அவன்தம் வாழ்க்கையில் ஒரு பிடிப்பும், நம்பிக்கையும் ஏற்படவும், தன் கடமையினைத் தொடர்ந்து ஆற்றவும் வழிவகுக்கின்றது. மேலும், இதுபோது அன்பின் ஆழத்தையும், அருமையினையும் உணரவும் செய்கின்றான். துன்பத்திலும், ஆபத்திலும் தனக்குக் கிடைத்திடும் உதவிகளைக் கொண்டுதான், தான் பெறும் அனுதாபங்களைக் கொண்டுதான் அவன் தன் இனத்தின் பெருமையை உணருகின்றான்.

(48-ஆம் பக்கம் பார்க்க)

# செய்திச் சுருக்கம்

## பிரம்மோத்ஸவம்

திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் இவ்வாண்டு நவராத்திரி பிரம்மோத்ஸவம் 9-10-91 முதல் 17-10-91 வரை வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. 13-10-91-ஆம் தேதியன்று நடைபெற்ற கருட சேவைக்கும், 16-10-91 அன்று நடைபெற்ற வெள்ளித்தேர் விழாவிற்கும் ஆயிரக்கணக்கில் பக்தர்கள் திருமலைக்கு வருகை புரிந்தார்கள். இதுபோது 70 அடி உயரமுள்ள சுவாமியின் விஸ்வரூப திருவுருவம் (கட்அவுட்) பக்தர்களை வெகுவாகக் கவர்ந்தது. இப்பிரம்மோத்ஸவத்தின் போது மலர்களால் அலங்கரிக்கப்பட்ட பலவேறு வாகனங்களில் உத்ஸவரின் திருவீதிக் காட்சிகள் கருத்துக்கும், கண்களுக்கும் பெருவிருந்தாக அமைந்தன. இப்பிரம்மோத்ஸவ வாகன திருவுலாக்காட்சி வர்ணனைகள் திருப்பதி வானொலியில் நேரிடையாக ஒலிபரப்பப்பட்டன. இப்பிரம்மோத்ஸவத்தின் போது திருமலைக் கோயில் வருமானம் ரூ. 1.57 கோடியாகும். சுமார் 4.60 இலட்சம் யாத்திரிகர்கள் திருமலைக்கு வருகைபுரிந்தனர்.

* * * *

## திருமலையில்

இலங்கை நாட்டு நீர்ப்பாசனத்துறை அமைச்சர் திரு: செல்லசாமி அவர்கள் 3-10-91 அன்று திருமலைக்கு வருகை புரிந்து ஏழுமலையானைத் தரிசித்தார். காலை நடைபெற்ற சுப்ரமாத சேவையிலும் பங்கேற்றார்.

ஆந்திர மாநில சிறுதொழில் அமைச்சர் திரு. ஆர். செங்கா ரெட்டி அவர்களும், முன்னாள் அமைச்சர் திரு. டி. உபேந்திரா அவர்களும் திருமலைக்கு வருகை புரிந்தனர்.

* * * *

இந்தியத் துணைக்குடியரசுத் தலைவர் டாக்டர் எஸ். சங்கர் தயாள் சர்மா அவர்கள் 10-10-91 அன்று தன் துணைவியாருடன் திருமலைக்கு வருகை புரிந்தார். கோயிலில் தக்க வைதீக மரியாதைகள் அன்னார்க்கு வழங்கப்பட்டன. பின்னர் தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் உள்ளிட்ட பல்வேறு உயர் அலுவலர்கள் டாக்டர். சர்மா அவர்களை எதிர்கொண்டழைத்தனர். அன்று இறைவனைத் தரிசித்ததும், அடுத்தநாள் நடைபெற்ற அபிஷேக சேவையிலும் பங்கேற்றார். அன்று காலை திருப்பதி அடுத்துள்ள திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயிலுக்கும் வருகை புரிந்து, அம்மையாரைத் தரிசித்தார். அதற்கு முன்பு திருமலையில் பத்மாவதி விருந்தினர் விடுதியில் தி.தி தேவஸ்தான இந்து தர்ம பிரசாரத்தின் கூடுதல் செயலர் திரு. எம். நாகபாணி சர்மா அவர்கள் நடத்திய வடமொழி அஷ்டாவதான நிகழ்ச்சியைக் கண்டுகளித்தார்.

* * * *

13-10-91 அன்று திருமலையில் கூடிய தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுக் கூட்டத்தில் கீழ்வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அடுத்த வருடம் ஜனவரி மாதத்தில் திருமலையில் வேத மாநாடு ஒன்று நடைபெறஉள்ளது. இம்மாநாடு காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீஜெயேந்திர சுவாமிகளின் தலைமையில் நடைபெறும். இதுபோது இசைவிழாக்கள் நடைபெற தகுந்த ஏற்பாடுகள் மேற்கொள்ளப்படும்.

காஞ்சி ஸ்ரீவரதராஜசுவமாமி கோயிலில் உள்ள 'தங்கபல்லி' யினைப் பழுதுபார்க்கும் பணிகளுக்காக ரூ. 2.5 இலட்சம் நன்கொடையாக வழங்கப்படும்.

* * * *

திருவேங்கடவன் பற்றிய புராண, இலக்கிய, கோயில் பற்றிய முழு விவரங்கள் அடங்கிய 'ஸ்ரீநிவாஸா ஸாகித்யம்' எனும் தலைப்பில் நூல் தொகுப்புகள் பல்வேறு இந்திய மொழிகளில் வெளிக்கொணரும் வகையில் திட்டம் ஒன்று மேற்கொள்ளப்பட்டுள்ளது. இவ்வகையில் முதலில் ஆங்கிலத்தில் 10 தொகுப்புக்கள் வெளிவர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

* * * *

# திருமங்கையாழ்வார்

புலவர் பொன். திருக்கண்ணபுர சுப்பிரமணியன் - இராசை.

*வாழி பரகாலன் வாழிகலிகன்றி*
*வாழி குறையலூர் வாழ்வேந்தன்-*
*வாழியரோ*
*மயோனை வாள்வலியால்*
*மந்திரங்கொள் மங்கையர்கோன்*
*தூயோன் சுடர்மான வேல்*
*-உடையவர்*

எம்பெருமானை நேரிற்கண்டு, அவ்னுடைய ஸ்வரூப குண சேஷ்டிதங்களை அனுபவித்தார்கள் ஆழ்வார்கள்; பேரானந்தப் பெருங்கடலில் திளைத்தவர்கள். அவர்கள் திருவாய் மலர்ந்தருளியவை நாலாயிரத் திவ்யப் பிரபந்தப் பாசுரங்கள். அவர்களுடைய பாடல்களிலுள்ள அகச் சான்றுகள், திவ்விய சூரி சரிதம், குருபரம்பரைப் பிரபாவம், உபதேசரத்தின மாலை, தேசிகப் பிரபந்தம், பிரபன்னாமிருதம், பெரிய திருமுடி யடைவு, கோயிலொழுகு என்ற நூல்களும், பல தனியன்கள் முதலியனவும் மூலாதாரங்களாக உள்ளன. அவைகளில் பற்பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. பொதுவாக நோக்குமிடத்து ஆழ்வார்களின் வரலாற்றின் முக்கியமான நிகழ்ச்சிகளில் ஒற்றுமை காணப்படுகிறது என்று கூறலாம்.

ஆழ்வார்கள் பன்னிருவரில் அதிகமான பாசுரங்களை அருளியவர் திருமங்கையாழ்வார். நாலாயிரத்தில் மூன்றில் ஒரு பங்குக்கு மேலாக அவருடைய பாடல்களே. 1361 பாசுரங்களைப் பாடியுள்ளார். அதிகமான திவ்விய தேசங்களைப் பாடியவரும் அவரே. இவர் பாடல் தொகுதிக்கு "பெரிய திருமொழி" என்று பெயர். பாடல் வகை கீழ்வருமாறு:-

| | |
|---|---|
| பெரிய திருமொழி | 1084 |
| திருக்குறுந்தாண்டகம் | 20 |
| திருநெடுந்தாண்டகம் | 30 |
| திருவெழு கூற்றிருக்கை | 1 |
| சிறிய திருமடல் | 77 1/2 |
| பெரிய திருமடல் | 148 1/2 |
| | 1361 |

நம்மாழ்வார் பாடியுள்ள நான்கு பாடற்தொகையாகிய நான்மறைக்கு இவர் பாடியுள்ளவை ஆறங்கம் போலே ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் என்ற நாற்கவிகளாலும் அருளிச்செய்தனர் என்பர்.

இவ்வாழ்வார் சோழவளநாட்டில் திருவாலி திருநகரிக்கு அண்மையிலுள்ள திருக்குறையலூரிலே கள்ளர் மரபிலே கலி 398 நள ஆண்டு கார்த்திகை பௌர்ணமி வியாழக்கிழமை கிருத்திகை நட்சத்திரத்தில் அவதாரம் செய்தார் என்று சொல்லப்படுகிறது. இவர் பாடல்களில் தம்மைப் பற்றிப் பின்வருமாறு கூறிக்கொள்கிறார்.

*'திண்ணர் மாடங்கள் சூழ்திரு*
*மங்கையர் கோன் கலியன்'*
*'மாடமாளிகை சூழ்திரு*
*மங்கை மன்னன்'*



'மன்னு மாமாட மங்கையர் தலைவன்
மானவேல் கலியன்'
கல்லின் மன்னு மதிள்
மங்கையர் கோன்'
'கன்னி நன் மாமதிள்
மங்கை வேந்தன்'
'வானாரும் மதில்சூழ் வயல்
மங்கையர் கோன்'
'கார் மன்னு நீள்வயல்
மங்கையர் கோன்'
'வண்டறை சோலை மங்கையர்
தலைவன்'
'மன்றில் மலிபுகழ் மங்கை
கலிகன்றி
வண் களக நிலவெறிக்கும் வயல்
மங்கை நகராளன்!'

இந்தக்கூற்றுக்களால் இவர் பிறந்த ஊரின் பெயர் திருமங்கை என்றும், அதற்கு அவர் தலைவர் என்றும் தோன்றுகிறது. இவருடைய மனைவியின் பெயர் 'திருமங்கை' என்று குருபரம்பரைப் பிரபாவத்தில் கூறப்படுகிறது. இவர் அவதரித்தது குறவனூர் என்று வழங்கும் திருக்குறையலூர் ஆகும்.

ஆழ்வார்களின் காலத்தை கிறிஸ்து சகாப்தத்திற்கு முற்பட்டே பழைய நூல்கள் கூறுகின்றன. இவர்கள் பாடல்களில் வரும் மன்னர்களைப் பற்றிய குறிப்புக்கள், கல்வெட்டுகள், செய்யுள்நடை, இலக்கணச் சிறப்புகள் முதலிய பல ஆதாரங்களைக் கொண்டு ஆராய்ந்த பேரறிஞர்கள், ஆழ்வார்கள் காலம் கி.பி. ஐந்தாம் நூற்றூண்டிலிருந்து பத்தாம் நூற்றூண்டுக்குள் இருக்கலாம் எனறு கருதுகின்றனர். திருமங்கையாழ்வார் திருஅட்டபுயகரப் பாசுரத்தில் 'மன்னவன் தொண்டையர்கோன் வணங்கும் நீள்முடி மாலை வயிர மேகன்' என்று ஒரு அரசன் பெயரைக் குறிக்கிருர். காஞ்சிபுரம் பரமேச்சுவரப் விண்ணகரப் பதிகத்தில் பல்லவ மன்னனின் வெற்றிச் சிறப்பைப் பலபடியாகப் புகழ்ந்துள்ளார். 'தடமாமதிள் சூழ்ந்தழகாயகச்சி, தேர் மன்னு தென்னவனை முனையில் செருவில் திறல் வாட்டிய திண்சிலையோன், பார்மன்னு பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுவர விண்ணகர மதுவே' என்று ஒரு பாசுரத்தில் கூறுகிருர். 'நந்தி பணிசெய்த' என்ற ஒரு பாடலில் நந்திவர்ம பல்லவனைக் குறிக்கிருர். இவனுடைய தம்பி தந்திவர்ம பல்லவன் காலமாகிய கி.பி. ஒன்பதாம் நூற்றூண்டின் இடைப்பகுதியில் இவ்வாழ்வார் வாழ்ந்திருக்கலாம் என்று ஆராய்சியாளர்கள் எண்ணுகின்றனர்.

ஆலி நாட்டிலே தாமரைப் பொய்கையொன்றில் நீராட அரமகளிர் வந்தனர். அவர்களில் திருமாமகள் என்பவள் குமுதமலர் எடுக்க முற்படுகையில் மற்றவர் விட்டுச்சென்றனர். தனித்து நின்ற இப்பெண்ணைக் கண்ட திருநாங்கூர் மருத்துவன் ஒருவன் அழைத்துச்சென்று 'குமுதவல்லியார்' என்று பெயரிட்டு வளர்த்து வந்தனன். இவளுடைய அழகைப் பற்றி கேள்விப்பட்ட திருமங்கை மன்னர் இவளை மணக்க விரும்பினர். வளர்ப்புத் தந்தை இசைந்தனர. ஆனால் அப்பெண் பஞ்ச சம்ஸ்காரமுள்ளவர்க்கன்றி மற்றொருவர்க்கும் தம்மை பேசவொட்டாமை தெரிவித்தனர். ஆலி நாடரும் திருநறையூர் சென்று எம்பெருமான் திருமுன்பு 'தீயிற் பொலிகின்ற செஞ்சுடராகி திகழ்ச் சக்கரத்தின் கோயிற்பொறியாலே' திரு இலச்சினை பெற்று, கேசவாதி துவாதச ஊர்த்துவ புண்டரங்களுடன் வந்தார். அம்மையார் ஒரு ஆண்டுக்கு 1008 ஸ்ரீவைணவர்களுக்கு அமுது செய்விக்க வேண்டுமென்று சொல்ல அதற்கும் ஆழ்வார் இசைந்தார். இருவருக்கும் திருமணம் நடந்தது.

அமுது செய்விப்பதில் தம் பொருளை இழந்தார். பகுதிப்பணம் கட்டமுடியாததால் சோழ மன்னன் இவரைச் சிறைப்படுத்தினான். எம்பெருமான் கனவில் 'காஞ்சீபுரம் வந்தால் பொருள் தருகிறோம்' என்று சாதிக்க, அரசர் ஏவலாளருடன் காஞ்சிபுரம் சென்று குறிப்பிட்ட இடத்தில் பொருளைக்கண்டெடுத்து, பகுதிப்பணம் கட்டியது போக மிகுதியை அடியவர்க்கமுதளித்தலில் செலவு செய்து வந்தார். எம்பெருமான் தேவியுடன் மணவாளனாக வந்து ஆழ்வார் முன் தோன்றினார். ஆழ்வார் அவர்களைச் சூழ்ந்து பொருளுக்காக ஆபரணங்களையெல்லாம் கைப்பற்றி அறுகாழி மோதிரத்தைப் பற்களால் கடித்துக் கழற்றிவிட்டார். எம்பெருமான் 'நம் கலியனோ' என்றருளிச்செய்தார். அணிகலன்களைச் சுமையாகக்கட்டி எடுக்கப்பார்க்கத் தூக்க முடியாமல் இருநதது. ஆழ்வார் எம்பெருமானை நோக்கி 'நீ மந்திரவாதம் பண்ணினாய்' என்று நெருக்கினார். அம்மந்திரத்தைத் தாம் சொல்லிக் கொடுப்பதாகச் சொல்லி ஆழ்வார் திருச்செவியில் அஷ்டாட்ச

ரமான பெரிய திருமந்திரத்தை இறைவன் உபதேசித்தருளினார். ஆழ்வாரும் 'வாடினேன் வாடி' என்று தொடங்கும் முதற் பத்தைப் பாடி "பெற்ற தாயி னும் ஆயின செய்யும் நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன் நாராயணவென் னும் நாமம்" என அருளி னார். எம்பெருமான் பிராட் டியோடும் திருக்கோலக் காட் சியளித்து மறைந்தனர். திரு மங்கை மன்னர், பெரிய திரு மொழி முதலிய ஆறு திவ்வி யப் பிரபந்தங்களை அருளிச் செய்தார். திவ்விய தேசங் கள் பலவற்றைச் சேவித்து சீர் காழிக்கு வந்து சம்பந்தரைச் சந்தித்தார். "ஒரு குறளா யிரு நிலம்" என்ற திருமொ ழியருளி "ஆலிநாடன் அருள் மாரி அரட்டமுக்கி அடையார் சீயம் கொங்குமலர்க் குழலியர் வேள் மங்கை வேந்தன் கொற் றவேல் பரகாலன் கலியன்" என்று தம் பெருமை தோன் றக் கூற, சம்பந்தரும் "நாலு கவிப் பெருமாள் என்ற விருது உமக்குச் செல்லும்" என்று கூறி னார். சம்பந்தரிடம் ஆழ்வார் ஒரு வேலைப் பெற்றார் என் றும் கூறுவர். தம்மை, "வேல் வலவன்", "வேல்வலவன் கலி கன்றி" "வேல்கலியன்", "கால வேல் பரகாலன்", "வேல்கைக்க லியன்" என்று பல இடங்களில் கூறிக்கொள்கிறார். எப்போதும் கையிலே வேல் வைத்திருந்தார் போலும்.

பின்னர், ஆழ்வார் திருவரங் கம் பெரிய கோயில் விமானம் மண்டபம் கோபுரம் முதலிய வற்றைத் திருப்பணி செய்யத் திருவுளம் கொண்டார். நாகப் பட்டினத்திலிருந்த பொன்னா லான புத்த விக்கிரகத்தை ஒரு சூழ்ச்சியால், புத்த கோயிலுக் குட் செல்லும் வழியை ஒரு வன் மூலம் உணர்ந்து, அதை எடுத்து வந்து திருவரங்கம் திரு மதிள் திருப்பணிக்குப் பயன்ப டுத்தினார். அவர் எடுத்து வரு வதற்குள் விடியற்காலம் வந்த மையின் ஓரூரின் வயலில் விக் கிரகத்தைப்புதைத்து மறைத்து வைத்திருந்து மறு இரவில் மறுபடியும் எடுத்து வந்தார். அப்படி அவர் மறைத்து வைத் திருந்த இடம் 'பொருள்வைத்த சேரி' என்பது இப்போது 'புர வாச்சேரி' என்று வழங்குகிறது. ஆழ்வார் மேலும் திருவரங்கத் தில் திருமண்டபம் முதலிய திருப்பணிகள் செய்து உல கத்தை வாழ்வித்தருளினார்.

இவ்வாழ்வாருக்குப் பல திரு நாமங்கள் உண்டு. நாலுகவிப் பெருமாள், கவிலோக திவாக ரன், சதுஷ்கவி சிகாமணி, ஷட் பிரபந்தகவி முதலியன. பாசு ரங்களில் தம்மை, மங்கை வேந்தன் கலியன், 'பரகா ல்ன் கலியன்' "ஆலிநாடன்", "ஆலிமன்னருள்மாரி" என்று கூறிக்கொள்கிறார். தம்மு டைய வீரத்தையும், தமிழ்ப்புல மையை கொடை வண்மையை யும் "கடமாகளியானை வல் லான்", "இருந்தமிழ் நூற்புல வன்", "காரார் புயல் கைக்கலி யன்றி" என்று விதந்தோதியரு ளுகிறார்.

பாசுரங்களில் தாம் இளமை யில் சிற்றின்பத்தில் எளியராயி ருந்ததையும், புத்தர், சமணர், இராவணன் இவர்களைப் பற் றியும் பிரகலாதன் கஜேந்தி ரன் இவர்களுக்கு எம்பெருமான் சேவை சாதித்த பெருமையை யும், மோகினி அவதாரம், மற்ற தசாவதாரங்களின் மகிமையை யும் பல இடங்களில் சிறப்பாக சொல்லியிருக்கிறார். வண்டு, நாரை இவைகளைத் தூதாக வைத்துப்பாடுகிறார். காக்கை, குயில், கிளி, பல்லி, செம் போத்து கோழி முதலியவை களை விளித்து இறைவனைப் பாடச்சொல்கிறார். அகப்பொ ருள் துறையில் பலபாடல்களை அருளியுள்ளார். திருக்கண்ணபு ரத்து அருள்மிகு சௌரிராசப் பெருமாள் பற்றிப்பாடுகையில்,

"செங்கால மடநாரா யின்றே சென்று
திருக்கண்ண புரமபுக கென
செங்கண்மாலுககு
என்காத லெனதுணைவரக்
குரைதநியாகில
இதுவொப்ப தெமக்கின்ப
மிலலை நாளும்
பைங்கான மீதெல்லா முனதே
யாகப்
பழனமீன கவர்ததுணணத்
தருவன் தநதால்
இங்கேவந் தினி திருந்துன
பெடையும் நீயும்
இருநிலததிலினிதின்ப
மெயதலாமே"

என்பதைப் படித்தின்புறறபா லது.

இறைவனை நேரில் அனுப வித்து அவன் குணங்களைச் சொல்லுகிற வேதம் தமிழில் தான் உள்ளது என்று காலஞ் சென்ற பேரறிஞர் கிருஷ்ணசாமி அய்யர் அவர்கள கூறியி ருக்கின்றார்கள். ஆழ்வார்கள் நாயன்மார்கள் இவர்கள் பாடல் களில் கருத்தொற்றுமைகள் பல

வற்றைக் காணலாம். ஆழ்வார் கண், செவி, வாய், கை, உள்ளம் இவை எம்பெருமானை வணங்குவதற்கே என்று கூறியிருப்பது அப்பரின் 'தலையே நீ வணங்காய்' என்று தொடங்கும் பாடலை நினைவூட்டுகின்றது. இன்னும்,

"புலன்கள் நைய மெய்யில் மூத்துப்
போந்திருந்துள்ள மெள்கி
கலங்க ஐகிள் போதவுந்திக்
கண்ட பிதற்றுமுன்
அலங்காய தண்டுழாய் கொண்டாயிர
நாமஞ் சொல்லி
வலங்கொள் தொண்டர் பாடியாடும்
வதரி வணங்குதுமே"

என்ற ஆழ்வாருடைய பாசுரத்தையும்,

"புலன்கள் பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட் டைம் மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்
றருள் செய்வான் அமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழுவதிர மழை யென்றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
முகில் பார்க்குந் திருவையாறே"

என்று திருஞான சம்பந்தர் பாடலையும் கூர்ந்து நோக்கி இன்புற வேண்டியவை. மேலும்,

"ஆசை வழுவாதேத்து மெமக்கிங்
கிழுக்காய்த்து அடியோர்கருத்
தேசமறிய வுமக்கே யாளாய்த்
திரிகின் றோமுக்கு
காசி னொளியில் திகழும்
வண்ணம் காட்டீர் எமபெருமான்
வாசி வல்லீர் இந்தளூரீர்
வாழ்நதே போம் நீரே

என்ற ஆழ்வார் பாசுரத்திலும்

"மீளா அடிமை உமக்கே ஆளாயப்
பிறரை வேண்டாதே
மூளாத்தீபபோல உள்ளே கனன்று
முகத்தான் மிகவாடி
ஆளாயிருக்கு மடியார் தங்க
ளல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர திருவாரூரீர்
வாழ்ந்து போதீரே"

என்ற சுந்தரர் பாடலிலும் உள்ள கருத்தொற்றுமைகளைக் கண்டு மகிழும் பெற்றியது. இன்னும் இவை போல் பல பாடல்களை அறிய முடிகிறது.

திருமங்கையாழ்வாரின் பாசுரங்கள் தேனினும், கனியினும் கரும்பினும் இனிப்பவை; மனத்தை உருக்கவல்ல மாண்புடையவை; இறைவன் குணங்களை எழில் பெறப் புகழ்பவை; பேரானந்தப் பெருங்கடலில் ஆழ்விக்கச் செய்பவை. பிரபந்தம் அமைந்துள்ள முறையில் பெரிய திருமொழி முதல் பெரிய திருமடல் ஈறாக உள்ளவை நாராணுய என்ற பகுதியின் விரிவென்று ஆன்றோர் கூறுவர். இவ்வாழ்வாருடைய பாசுரங்களை ஓதியுணர்ந்து எம்பெருமான் திருவருள் பெற முயற்சிப்பது மக்களின் தலையாய கடமை.

"கற்றூர் பற்று அறுக்கும்
பிறவிப் பெரும் கடலே
பற்று வந்து அடியேன்
பிறந்தேன் பிறந்தபின்னை
வற்று நீர்வயல்சூழ-வயலாலி
அம்மானைப்
பெற்றேன பெறறதும்
பிறவாமை பெற்றேனே"

பொய்வணணம் மனத்து அகற்றிப்
புலன் ஐநதும் செலவைத்து
மெய்வண்ணம் நினைந்தவர்கரு
மெய்ந்நின்ற விததகனை
மைவணணம் கருமுகில் போல்
திகழ்வண்ணம் மரகதத்தின்
அவ்வண்ண வண்ணனை யான்
கண்டதென் அரங்கத்தே.
--திருமங்கையாழ்வார்

*****

## திக்கஜங்கள்

எட்டுத்திக்குகளிலும் எட்டு யானைகள் காவல் காக்கின்றன. அவற்றிற்கு திக்கஜங்கள் என்று பெயர்.

| திக் கஜங்களாவன: | குலபர்வதங்கள் ஏழு: |
|---|---|
| ஸுப்ரதீபம் | ரிக்ஷவரன் |
| ஐராவதம் | மஹேந்திரம் |
| புண்டரீகம் | மலயம் |
| வாமனம் | ஸஹ்யம் |
| குமுதம் | சுக்திமான் |
| அஞ்சனம் | விந்தியம் |
| புஷ்பதந்தம் | பாரியாத்ரம் |
| சார்வபௌமம் | |

ஆதாரம்:- ரகுவம்ஸ காவ்யம்

திரு. க. இராமலிங்கம் - புதுப்பேட்டை.

இளைஞர் பகுதி:

# மானுட சேவை-மாணவர் பங்கு

திரு. டி.டி. வரதராஜன் - சென்னை.

ஆண்டவனின் படைப்புத் தத்துவம் மிகவும் அதிசயமானது. அதனுள் பெரிய இரகசியமே அடங்கியுள்ளது. எந்த ஒரு ஜீவனையும் ஆண்டவன் பிறர்க்குப் பயன்படாத வகையில் படைக்கவில்லை. அறிவேயற்ற ஜடமாயினும் ஓரறிவு, ஈரறிவு படைத்த புழு பூச்சியாயினும் ஐந்தறிவு படைத்த மிருகங்களாயினும், ஆறறிவுடன் படைத்திடப்பட்ட மனித வர்க்கமாயினும், அதனதன் அடிப்படையில் ஒன்றுக்கொன்று, ஒருவருக்கொருவர் என்று எவ்வகையிலேனும் பயனளித்துப் பயன் பெறும் வண்ணம் தோற்றுவித்த இறைவனின் விந்தைச்செயலை என்னென்று போற்றுவது!!

"அரிது அரிது, மானிடராய்ப் பிறத்தல் அரிது" என்றார் ஔவைப் பிராட்டியார். கிடைத்தற்கரிய பிறவி மானுடப்பிறவி. மானுடப்பிறவி ஒன்றே பூரணத்துவம் பெற்றதாகும்.

எனவே மானுடப்பிறவி பெற்ற ஒருவர்க்கு இயற்கையிலேயே சேவை உள்ளம் அமைந்திருக்கும். அந்தச் சேவை உள்ளத்தை, தொண்டுணர்வை இளமைக் காலம் தொட்டே உடலோடும் உள்ளத்தோடும் ஒன்றி வளரச்செய்தல் அவசியம்.

சேவை மனப்பான்மை ஏற்பட இரக்க குணம், எளிமை வாழ்க்கை இன்றியமையாதனவாகும். பிறர் கஷ்டம் அறிந்து உதவும் உள்ளம், கீழோர் மேலோர் பாகுபாடின்றி உதவும் உத்தம குணம் வளர வேண்டும்.

பொறுமை, பிறர் ஏச்சுக்களை இலட்சியம் செய்யாத உயர்ந்த நோக்கம், சுயநலம் பாராது பிறர்க்கே உழைத்திடும் எண்ணம், கால நேரம் கருதாது அமைதியும் நேர்மையும் கொண்டு வாழ்தல நமது வாழ்க்கையின் முக்கியக் கடமையாகும்.

இத்தகைய உணர்வு முதலில் குடும்பத்திலிருந்து, பள்ளியிலிருந்து எனப் படிப்படியாக வளர்தல் அவசியம். சிறுர்கள் தம் பெற்றேர்கள் தேவையறிந்து, சிறு சிறு வீட்டுக்காரியங்களைச் செய்யப்பழகுதல், பிறகு அக்கம் பக்கத்தார் இடும் ஏவல்களை வெறுப்பின்றிச் செய்தல் எனத்தொடங்க வேண்டும்.

அடுத்து வரும் இன்றியமையாப் பருவம் மாணவப் பருவமாகும். "காலத்தே பயிர் செய்" என்பது போல் இன்றைய மாணவப் பருவ நாற்று நாளைய பெரும் விளைச்சல் என்பதை அறிதல் வேண்டும். இன்றைய நற்பள்ளி மாணவன், நாளைய நாட்டு நற்குடிமகன்.

'இளமையில் கல்' என்ற வசனம் வெறும் ஏட்டுக் கல்வியை மட்டும் குறிப்பிடவில்லை. மாணுக்கர்கள் இளமைப் பிராயந்தொட்டே கண்ணெனத்தகும் எண்ணும் எழுத்தும் பிறர் போற்றத்தகும் தொண்டுணர்வும் கற்க வேண்டும் என்பதே பொருள்.

தொட்டில் பழக்கம் - தொடக்கப் பழக்கம் - நல்லதாக அமையுமாயின், சேவை மனப்பான்மையுடன் வளருமாயின் அதுவே வாழ்க்கையின் வளர்ச்சிக்கு, நாட்டின் வளர்ச்சிக்கு உறுதுணையாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

> தோன்றிற் புகழோடு தோன்றுக அஃதிலார்
> தோன்றலிற் தோன்றுமை நன்று.

என்றார் வள்ளுவப்பெருந்தகை. தோன்றும் போதே எப்படிப் புகழோடு தோன்றமுடியும் என்ற ஐயமும், அப்படித் தோன்றும் வாய்ப்பு நம் கையில் எங்கே இருக்கும் என்ற வினாவும் எழும் சிலருக்கு. இங்கு தான் இறைவனின் கருணையுள்ளம் நமக்குப் புலப்படும். இதன் பொருளைத் தான் நாம் முன்னுரையிலேயே கண்டோம்.

மேலே குறிப்பிட்டபடி மானுட சேவையே மகேசன் தொண்டு. இதன் காரணம் இறைவனும் கருணையுள்ளம் கொண்டு தன்னால் படைக்கப்பட்ட உயிரி

னங்களின் நன்மை ஒன்றையே கருதுதலாம். அதனால் பிறர் துன்பம் கண்டு வருந்தி, உடன் அவர்க்குத் துயர் களைவிக்கும் குணமே பெரிதும் போற்றப்படுவது. அதையே இறைவனும் விரும்புகிறுன். மனிதன் மனிதனுக்குச் செய்யும் சேவை மறைமுகமாக இறைவனைச் சென்று அடைவது கண்கூடு.

சொந்த நாட்டிற்குத் தொண்டுபுரியும் ஒவ்வொரு குடிமகனும் தனது பிறவிப் பயனை அடைகின்றுன். 'தானே நாடு, நாடே தான்' என்று நினைப்பதைவிட நாடே முக்கியம் என்ற எண்ணமே உயர்ந்தது. இளமையில் மாணவர்களாக இருக்கும் போதே உதிக்கும் சேவை உள்ளம்தான் வளர்ந்து உயர்ந்து நிற்கும்.

மாணவர்கள்சமூகத்தொண்டு, பள்ளித்தொண்டு, வீட்டுத் தொண்டு, நாட்டுத்தொண்டு எனப் படிப்படியான வளர்ச்சி முன்னேற்றம் கொண்டு தொண்டு செய்யும் ஆர்வத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

குடும்பத்திற்குக் கட்டுப்படாது - சுற்றித் திரிதல் பயனற்றது. குடும்பத்தாரிடம் நற்சான்று வாங்கியவரே நாட்டுச்சேவையில் நற்பணி ஆற்றிட இயலும். பிறர்க்கு ஓர் இன்னல் என வரும் போது துடித்து, உடன் உதவிட விழைபவன் எவனோ அவனே, நாட்டைக் காக்க நான் இருக்கிறேன், என்று ஓடிவர இயலும்.

'தம் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற மனத்திணமை பூண்டு தாரக மந்திரமாகக் கொண்டு எந்த ஒரு ஆபத்தையும் துச்சமாகக் கருதிப் பணி செய்து கிடப்பவனை மக்கள் வாழ்த்துவர், நாடே போற்றும்.

'யாம் பெற்ற இன்பம், பெறுக இவ்வையகம்' என்று உள்ளத்தே எண்ணும் மாணவச் செல்வங்கள் நாட்டின் பொக்கிஷங்கள். முத்தும் பவழமும், மணியும் பொன்னும் ஒரு நாட்டிற்கு அழகு தருவனவென்றுல், மாணவ மாணிக்கங்கள் அந்த அழகுக்கு மேலும் அழகு செய்வனவாக விளங்குவது.

நாட்டு வரலாற்றில் நற்பெயர் பெற்று விளங்கிடும் நம் தலைவர்கள் ஒரு காலத்தில் மாணவர்களாக விளங்கியவர்கள். இவர்கள் யாவரும் 'யானை இருந்தும் ஆயிரம் பொன், இறந்தும் ஆயிரம் பொன்' என்ற கணக்கில் நாட்டிற்கு உதவிய தொண்டுள்ளம் படைத்தவர்கள்.

இத்தகைய வரலாற்று வீரர்களின் அடியொற்றி மாணவப் பருவத்தை மிகப்பயனுள்ள பருவமாகக் கருதி நாட்டிற்கும், வீட்டிற்கும் நல்ல மகனாக உருவாக ஒவ்வொரு மாணவனும் உழைத்திடல் வேண்டும்.

களிமண்ணும் கைவண்ணத்தால் கற்பகப் பிள்ளையாராக மாறும்போது கற்றுணர்ந்த மாணுக்கர் தாம் கற்ற கல்வியினால் மற்றையோர்க்கு உற்ற துணையாக உழைத்திடலே தாம் பெற்ற பயனாகும்.

தாம் பெற்ற மானுடப் பிறவிக்காக ஆண்டவனுக்கு நன்றி சொல்லி, சேவையுள்ளத்தின் அவசியத்தை அறிந்து மேன்மேலும் இந்நாடு சிறக்க மாணவர்களாகிய நாம் உழைப்போமாக. வளம் கொழிப்போமாக.

வாழ்க தொண்டுள்ளம்!

வளர்க மாணவச்செல்வங்கள்!!

***



பறக்கும் (தேர்) குதிரைகள்

ஸ்ரீசாரங்கபாணி கோயில் தேர் -புகைப்படம்: கோவை சீதாராம்.

# தெலுங்கு ஆழ்வார் கிருஷ்ணமாச்சாரியர்

சாந்தாடி சதாசிவன் - திருப்பதி.

ஆழ்வார்கள்ஏற்றிய வைணவ விளக்கை ஒளிபெறச்செய்து இந்தியா முழுவதும் அதன் ஒளியைப் பரவச் செய்தவர்கள் ஆச்சாரியர்களாவர். அவ்வொளி இன்றும் தொடர்ந்து இருந்து வருகிறது. வைணவவொளி ஆந்திர நாட்டில் பரந்த போது அங்கும் வைணவப் பெரியோர்கள் தோன்றி வைணவ நூல்களை அருளத் தொடங்கினர். அவர்களுள் முதலாமவராகப் பெருமை பெற்று விளங்குபவரே கிருஷ்ணமாச்சாரியராவார்.

தெலுங்கு வைணவ இலக்கியத்தின் முன்னோடியாக விளங்கும் இவர் இராமாநுசரின் சமகாலத்தவர் என்று ஆச்சாரியசூக்தி முக்தாவளி என்ற தெலுங்கு நூலில் குறிப்பிடப்பெறுகிறுர். ஆனால் இவர் காகதீய மன்னன் பிரதாப ருத்திரன் (கி.பி. 1254-1323) காலத்தவர் என்றும், கி.பி. 13ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும் 14ஆம் நூற்றுண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தவர் என்றும் அறிஞர்களான ஆருத்ரா, எம். குலசேகரா ராவ் ஆகியோர் நிருவியுள்ளனர். ஆந்திராவில் உள்ள சிம்மகிரி நரசிம்மப் பெருமாள் மீது வழுவாத பக்தி கொண்ட இவர் அவ்விறைவன் மீதே நான்கு லட்சம் சங்கீர்த்தனங்களைப் பாடியுள்ளார். இவற்றை வசனங்கள் என்றும் குறிப்பிடுவர். இவர்தம் வசனங்களே தெலுங்கில் தோன்றிய முதல் வசனங்களாக உள்ளமையால் இவரைத் தெலுங்கின் முதல் வசன ஆசிரியராகப் போற்றுவர். இத்தகைய சிறப்பு மிக்க இவர்தம் வாழ்க்கை வரலாற்றினை இவர்தம் வசனங்களிலிருந்தே அறியலாம்.

இன்று சந்தபூர் என்றழைக்கப்பெறும் சந்தூரில் (மஹபூபு நகர் மாவட்டம்) கிருஷ்ணமாச்சாரியார் ஒரு வைணவக் குடும்பத்தில் தோன்றினார். பிறக்கும் போதே இவர் குருடராக இருந்ததால் தாய் தந்தையரின் அன்புக்கு ஆளாகாமல் ஒரு படுகுழியில் இடப்பட்டார. அதை உணர்ந்த நரசிம்மப்பெருமாள் குவ்வாரு என்ற ஒரு சந்நியாசி வடிவில் தோன்றி அக்குழந்தையை எடுத்துவந்து ஒரு மடத்தில் தங்கி வளர்த்து வந்தார். சிலநாட்கள் செல்லச் சிறுவனாகிய கிருஷ்ணமாச்சாரியரைச் சிம்மாசலத்திற்கு அழைத்து வந்து வளர்த்தார். ஒருநாள் குவ்வாரு சாமி மறைந்துவிடக் கிருஷ்ணமாச்சாரியார் பெரிதும் வருந்தினார். அச்சிறுவன் மீது கருணை கொண்ட நரசிம்மப்பெருமாள் ஒரு சிறுவன் வடிவில் வந்து அவருக்குத் தீர்த்தத்தை வழங்கினார். அத்தீர்த்தத்தைக் கண்களில் ஒற்றிக்கொண்டதும் அவருக்குக் கண்கள் வந்தன. பேரானந்தம் கொண்ட அவர் இறைவன் அருளால் கண்கள் வந்ததை உணர்ந்து பலவாறு தம் நன்றியை இறைவனுக்குத் தெரிவித்தார். அன்றிரவே பெருமாள் வராக வடிவில் அவர் கனவில் தோன்றித் தனக்கு நான்கு லட்சம் பாமாலைகள் பாடும்படி வேண்டினார். கிருஷ்ணமாச்சாரியர் தம் இயலாமையைச் சொல்லப் பெருமாளும் தக்க ஞானத்தை அவருக்கு அருளினார். அவரும் ப்ரபவ ஆண்டு ஆடிமாதம் சுத்த துவாதசியன்று யாழையும் சிறுதாளத்தையும் கொண்டு இறைவனைச் சங்கீர்த்தனங்களால் பாடத் தொடங்கினார். அப்பொழுது அவருக்கு வயது பதினான்கு ஆகும்.

சிம்மகிரி நரசிம்மனைச் சிறிது காலம் பாடிவர அவருக்குத் தன் மாமன் மகளுடன் திருமணம் நடக்கிறது. ஒரு மகனும் பிறக்கிறுன். ஆனால் அவன் ஏழாவது வயதிலேயே இறந்து விடுகிறுன். இந்நிலையில் கிருஷ்ணமாச்சாரியர் இறைவனைப் பாடும் தொண்டிலிருந்து படிப்படியாக விலகி மோகனாங்கி என்ற வேசியின் தொடர்பு கொண்டு அவள் வீட்டிலேயே தங்கிவிட்டார். வைணவ சிகாமணியான கிருஷ்ணமாச்சாரியாரின் பெரும்புகழை அறிந்து அவரைக் காண, அகோபிலம் நரசிம்மன் மீது பெரும் பக்தி கொண்ட நாட்டிய விநோதர்

களான பொதகமூர் பாகவதச் சகோதரர்கள் அறுவர் சிம்மாசலத்திற்கு வந்தனர். கிருஷ்ணமாச்சாரியரின் திருமாளிகையைத் தேடிக்கொண்டே வந்து வேசியின் வீட்டில் இருந்த அவரைக் கண்டு அவர்தான் கிருஷ்ணமாச்சாரியர் என்று அறியாமல் அவரிடம் "நாங்கள் அகோபிலம் நரசிம்மன் மீது பக்தி கொண்ட பொதகமூர் சகோதரர்கள். திருமாலின் பதினோராவது அவதாரமான கிருஷ்ணமாச்சாரியரைக் காண வந்துள்ளோம். அவர் திருமாளிகை எங்கே உள்ளது?" என்று கேட்டனர். அவர்கள் பக்திப் பரவசத்தில் இறைவனைப் பாடியாடும் போது இறைவனே வந்து களிப்பான். அத்தகைய சிறப்புக்குரியவர்கள் அவர்கள் என்பதை அறிந்த கிருஷ்ணமாச்சாரியர் தம் தரிசனத்திற்காக அவர்கள் வந்துள்ளனர் என்பதை அறிந்ததும் தம் தவறான செயல்களுக்காகப் பெரிதும் வருந்தினார்; மனம் மாறி அறிவுபெற்றார். அந்நிலையில் தம்மைக் காட்டிக்கொள்ளக்கூடாது என்று எண்ணி அவர்களை அழைத்துச் சென்று தம் திருமாளிகையை அவர்களுக்குக் காட்டினார். அவர்கள் அம்மாளிகையை நோக்கிச் செல்லக் கிருஷ்ணமாச்சாரியார் வேறுவழியாகத் தம் மாளிகைக்குச் சென்று தம்முடியையும் மீசையையும் எடுத்துவிட்டுப் பொலிவான பக்தராக அவர்களுக்குக் காட்சியளித்தார். பின்னர் பயபக்தியுடன் தம் தவற்றையெல்லாம் கூறி "உங்கள் மரியாதையைப் பெறும தகுதி எனக்கில்லை" என்று வேண்டினார். பின்னர் ஒருவரையொருவர் உரையாடிக கொண்டனர். பொதகமூர் பாகவதர்கள் சிம்மகிரி நரசிம்மன் முன்னிலையில் நாட்டியமாடிப் பாடினர். கிருஷ்ணமாச்சாரியரும் சங்கீர்த்தனைகளைப் பாடினார். அப்போது நரசிம்மசுவாமி சிறுவன் வடிவில் வந்து ஆனந்தத்தால் தாண்டவம் ஆடினான். முதலில் அப்பாகவதர்கள் அச்சிறுவனைக் கிருஷ்ணமாச்சாரியரின் திருமகன் என்றே கருதினர். பின்னர் இறைவனே அச்சிறுவன் என்பதை அறிந்ததும் கிருஷ்ணமாச்சாரியரின் பாடலைக் கேட்டே இறைவன் வந்தான் என்று அவரைப் போற்றினர். சிறிது காலம் அங்கேயே இருந்து பின்னர் அப்பாகவதர்கள் விடைபெற்றுச் சென்றனர். கிருஷ்ணமாச்சாரியர் சிம்மகிரி இறைவன் மீது மேலும் பல கீர்த்தனைகளைப் பாடலானார். இறுதியில் அவர் பாடிய நான்கு லட்சம் சங்கீர்த்தனைகளைத் தாமிரத் தகடுகளில் பொறித்து அவற்றை வண்டியில் ஏற்றிக் கொண்டு திருவரங்கம் சென்றிருக்க வேண்டும் என்பது ஏகாம்பரநாதர் இயற்றிய பிரதாப ருத்திரன் என்ற நூல் வழியாகத் தெரிகிறது.

கிருஷ்ணமாச்சாரியர் வசனச் சங்கீர்த்தனைகளை மட்டுமல்லாமல் துளசி மஹாத்யமு, நரசிம்ம நாமமுலு, ராமநாம சங்கீர்த்தனமு, ராமநாமாலு என்ற சிறு நூல்களையும் அருளியுள்ளதாக வேடூரி ஆனந்தமூர்த்தி அவர்கள் குறிப்பிடுவர். (தாள்ளபாக்க கவுல பதகவிதலு - பாஷாப்ரயோக விஷேசாலு; பகுதி-2, பக். 15-16) இவை துளசியின் பெருமையையும் நரசிம்மன் இராமன் இவர்களின் பெருமையையும் போற்றுந் துதுப் பனவாகும்.

## ஆழ்வார்களும் கிருஷ்ணமாச்சாரியரும்

கிருஷ்ணமாச்சாரியரைத் தாள்ளப்பாக்கத் திருவேங்கடநாதர் தம் பரமயோகி விலாசத்தில் குறிப்பிடும் போது அவர் சடகோபரின் வேதத்தைத் தெலுங்கில் கொண்டுவந்ததாகக் கூறுவர். கிருஷ்ணமாச்சாரியரும் தம் வசனம் ஒன்றில் பொதகமூர் பாகவதர்கள் தமக்குத் திருவாய்மொழியைப் படித்துக்காட்டியதாகக் குறிப்பிடுவர். இவற்றை நோக்கும் போது கிருஷ்ணமாச்சாரியர் நம்மாழ்வாரின் திருவாய்மொழியைத் தெலுங்கில் தந்திருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது. மேலும் அவர் ஆழ்வார்களிடத்தும் ஆழ்ந்த பக்தியையும் பற்றையும் கொண்டவர். அகோபிலம் இறைவன் மீது மிகுந்த பக்தி கொண்ட பொதகமூர் பாகவதர்களைக் கிருஷ்ணமாச்சார்யார் கண்டபோது அவர்கள் ஆழ்வர்கள் போன்று காணப்பட்டனர் என்று குறிப்பிடுவர். மேலும் ஆழ்வார்கள் திருமாலின் அபிநவதசாவதாரங்களாக விளங்குதல் போன்றே கிருஷ்ணமாச்சாரியரும் திருமாலின் பதினோராவது அவதாரமாகக் கருதப்பெறுகிறார்கள். ஆழ்வார்கள் திருமொழியை ஐந்தாவது வேதமாகக் கொள்வதைப் போன்றே தம் சங்கீர்த்தனைகளையும் ஐந்தாவது வேதமாகக் கொள்கிறார்.

இவ்வாறாக ஆழ்வார்களிடத்தும் அவர்தம் அருளிச்செயல்களிடத்தும் பற்று கொண்ட

கிருஷ்ணமாச்சாரியாரின் வசனங்களில் ஆழ்வார்களின் கடவுட் கொள்கையும் காணப்பெறுகின்றன.

உலகமனைத்தும் திருமாலே, அவனே தன்னிகரற்ற தெய்வம் என்பது ஆழ்வார்கள் கொள்கை.

"நீயே உலகெலாம்; நின்னருளே
நிற்பனவும்
நீயே தவத்தேவ தேவனும்"
"தேருங்கால் தேவன் ஒருவனே
என்றுரைப்பர்
ஆரும் அறியார் அவன் பெருமை"

என்று திருமழிசையாழ்வாரும்,

இவையும் அவையும் உவையும்
இவரும் அவரும் உவரும்
எவையும் எவரும் தன்னுள்ளே
ஆகியும் ஆக்கியும் காக்கும்
அவையுள் தனிமுதல் எம்மான்

என்று நம்மாழ்வாரும் பலவாறு பாடி நிருவுவர். இக்கொள்கையையே கிருஷ்ணமாச்சாரியரும்,

"உயிர்கள் அனைத்தும் நீயாகி, ஏகமாகி அனேகமாகி, ஆகாயமாகி, வெளியாகி, நிலையானதாகி, நிறையற்றதாகி, வியப்புறச் செய்தும் இந்திர ஜாலம் மகேந்திர ஜாலம் விந்தைகள் செய்தும், விலங்குகள் மனிதர்கள் கிருமிகள், பூச்சிகள், எறும்புகள் முதலிய உயிர்கள் அனைத்தும் நீயாகியும் உள்ள உன் ஏற்றத்தை அறியாத பிரமன், சிவன் முதலானவர்களும் பிரகலாதன், நாரதன்-விபீடணன் முதலான பாகவதர்களும் உன்னைப் போற்றி உரைக்க முடியாது" என்று சிம்மகிரி நரசிம்மனைப் போற்றும் வகையில் புலப்படுத்துவர்.

"பெற்றதாய் நீயே பிறப்பித்த
தந்தைநீ
மற்றையார் ஆவரும் நீ"

என்று நம்மாழ்வார் பாடினால் இவரும்,

"தேவா! தாயும் தந்தையும் நீயே!
குலகுருவும்
நீயே! ஆசாரியனும் நீயே!

என்று பாடுவர்.

பக்தித்திறமும் இறைஞானமும் சாதியைக் காட்டிலும் சிறந்தது என்பது ஆழ்வார்கள் முடிவு. இழிந்த குலத்தவனானாலும் அவன் திருமால் பக்தனானால் அந்தணர்க்கு நிகரானவனாவான். அவ்வாறே பல கற்றுணர்ந்த அந்தணனானாலும் அவன் திருமாலைப் பழித்தால் இழிந்த குலத்தவனேயாவான் என்பது ஆழ்வார்கள் கருத்து.

'பழுதிலா ஒழுகலாற்றுப்
பலசதுப் பேதி மார்கள்
இழிகுலத் தவர்க ளேனும்
எம்மடி யார்க ளாகில்
தொழுமின் கொடுமின் கொள்மின்"

"அமரவோர் அங்கம் ஆறும்
வேதமோர் நான்கும் ஓதித்
தமர்களில் தலைவர் ஆய
சாதிஅந் தணர்க ளேனும்
நுமர்களைப் பழிப்ப ராகில்
நொடிப்பதோர் அளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்"

என்ற தொண்டரடிப் பொடியாழ்வாரின் பாடல்வரிகள் இதைச் சுட்டும். கிருஷ்ணமாச்சாரியரும் அதையே தம் வசனங்களில் வலியுறுத்துவர.

'தேவா! விஷ்ணுப்பக்தி இல்லாத கற்றவரை விட அரி கீர்த்தனை செய்பவரே உயர்ந்த குலத்தோர். புலையனானாலும் என்ன? எந்த வருணத்தைச் சார்ந்தவனானும் என்ன? அந்தணனை விட அவனே உயர்ந்த குலத்தோன்.'

என்பன அவர்தம் வசனவரிகள்

'மற்றுமோர் தெய்வம் உண்டோ? அவனல்லால் தெய்வம் இல்லை' என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும் 'தேருங்கால் தேவன் ஒருவனே என்றுரைப்பர். ஆரும் அறியார் அவன் பெருமை' என்று திருமழிசையாழ்வாரும் 'திருக்குருகூரதனுள் பரன்திறமன்றிப் பல்லுலகீர்! தெய்வம் மற்றில்லை, பேசுமினே!' என்று நம்மாழ்வாரும் பாடுவதற்கேற்பக் கிருஷ்ணமாச்சாரியரும் திருமாலின் அமிசமான அநாதபதி சுவாமி நரஹரி போன்ற வேறு தெய்வம் இல்லை என்று பலவாறு பாடுவர்.

திருமாலின் அடியவர்களுக்கு அடியவர்களாக இருக்கவேண்டும் என்பது ஆழ்வார்களின் தீராத ஆசை. அது,

ஆடிப்பாடி அரங்காவோ என்று
அழைக்கும் தொண்டரடிப்பொடி
ஆடநாம்பெறில் கங்கைநீர் குடைந்து
ஆடும்வேட்கை யென் னாவதே"

என்ற குலசேகர் வாக்கிலும்,

'குலந்தாங்கு சாதிகள் நாலிலும்
கீழிழிந்து எத்தனை

நலந்தான் இலாதசண் டாளசண்
டாளர்கள் ஆகியும்
வலந்தாங்கு சக்கரத் தண்ணல்
மணிவண்ணற்கு ஆளென்றுஉள்
கலந்தார், அடியார் தம்அடி
யார்எம் அடிகளே"

என்ற நம்மாழ்வார் வாக்கி லும் வெளிப்படுவதை அறிய லாம். கிருஷ்ணமாச்சாரியரும் இவ்வாசையையே கொண்டவ ராவார். அவர் இறைவனிடம்,

"பலகல்வி கற்றவனாகச் செய்து பல உருவங்களை உள்ளவனாகச் செய்யாதே! எந்த வருணமானா- லும் என்ன? உன் திவ்விய நாமப்- பெருமையை அறியச் செய்து உன் தாசனுக்குத் தாசனாக என்னைச் செய்வாயாக."

என்று வேண்டுவர்.

நம்மாழ்வார் திருமாலின் சிறப்பைக் கூறுமிடத்தில் 'கேட் பார்கள் கேசவன் கீர்த்தியல்லா மல் மற்றும் கேட்பரோ?' என்று வினா எழுப்பிப் பிறகு பிற தெய்வகீர்த்திகளைக் கேட்டால் அவை செவிசுடும் கீழ்மை வச வுகளாகவே இருக்கும் என்று கூறுவர். ஆனால் கிருஷ்ண மாச்சாரியரோ பிற தெய்வ கீர்த் திகளைக் கேட்பது தீவினை யாகவே கொள்வர். திருமா லைப் போற்றும் அரிகீர்த்தனை கள் வெறுக்கத்தக்கது என்று எண்ணிப் பிற தெய்வக் கீர்த் தனைகளைக் கேட்ட மனிதன் மறுபிறவியில் செவிடனாகப் பிறப்பான் என்பார். இதில் அவர்தம் தீவிர வைணவப்பற்று புலப்படுவதைக் காணலாம்.

"ஞானத்தால் நன்குணர்ந்து
நாரணன்தன் நாமங்கள்
தானத்தால் மற்றவன்பேர்
சாற்றினால் வானத்து
அணியமரர் ஆக்குவிக்கும்
அஃதன்றே நங்கள்
பணியமரர் கோமான் பரிசு"

என்ற பூதத்தாழ்வாரின் திரு வாக்குக்கு ஏற்பத் திருமாலின் திருநாமங்களைக் கூறிப் போற் றித் துதிக்கும் தம் சங்கீர்த் தனங்களை யார் எழுதினா லும், படித்தாலும், கேட்ட லும், அவர்களுக்கு வாழ்நாள், உடல்நலம், செல்வம் ஆகிய வற்றையும் இறுதியில் அவருக் குக் கொடுத்த வைகுண்டப் பதவியையும் இறைவன் அருள் வான் என்று கிருஷ்ணமாச் சாரியாரும் கூறுவர். இவ்வச னம் ஆழ்வார்களின் பலசுருதி பாடல்களுக்கு நிகரானவை. ஆனால் அவை ஒவ்வொரு பதி கங்களின் இறுதியிலும் பிரபந் தத்தின் இறுதியிலும் அமைந் திருக்கும். கிருஷ்ணமாச்சாரிய ரின் பலசுருதி இதற்கு நேர்மா றானது. வசனங்களின் முதலி லேயே அது அமைந்துள்ளது.

ஆழ்வார்கள் திருமாலின் அவ தாரங்களுள் கண்ணன் இராமன் அவதாரங்களின் மீதே அதிகப் பற்றுடையவர்களாகக் காணப் பெறுவர். அவ்வாறே கிருஷ்ண மாச்சாரியரும் இவ்விரு அவதா ரங்களைப் பற்றிப் பெருமளவில் போற்றியுள்ளார். அவற்றுள்ளும் இராமவதாரத்தை மிகுந்தளவில் நேசித்துள்ளார். இராமநாமத் தைப் போற்றிச் சங்கீர்த்தனை களையும் பாடியுள்ளார். இவர் காலத்தில் இராமபக்தி சிறந்த அளவில் வளர்ந்திருந்ததையே இது காட்டுகிறது.

'திவ்வியமந்திரம் ராமநாமம்
புண்ணியமந்திரம் ராமநாமம்
முகதியருளும ராமநாமம
பக்தியருளும் ராமநாமம்'

என்று பலவாறு இராமநாமத் தின் பெருமையைக் கிருஷ்ண மாச்சாரியார் போற்றுவர்.

இவ்வாறாக,

வாய் அவனையல்லது வாழ்த்தாது
கை உலகம்
தாயவனையல்லது தாம்தொழா,
பேய்முலை நஞ்சு ஊணாக உண்டான்
உருவொடு பேரல்லால்
காணாகண் கேளா செவி"

என்ற பொய்கையாழ்வாரின் வாக்கிற்கு ஏற்ப விளங்கிய ஆழ் வார்கள் போன்று கிருஷ்ண மாச்சாரியரும் ஆந்திர நாட் டில் தோன்றிச் சிறந்து விளங்கி னார். ஆழ்வார்களின் பாடல் களுக்கு இறைவன் மகிழ்ந்தது போன்றே கிருஷ்ணமாச்சாரிய ரின் சங்கீர்த்தனங்களுக்கும் சிம் மகிரி இறைவன் மகிழ்ந்தான். அவர் பாடும் போது சிறுவ னாக வந்து அவர் தம் மடியில் அமர்ந்து கேட்டு இன்புற்றான். எனவே மேற்கண்ட கருத் துக்களைக் கொண்டு நோக் கும் போது கிருஷ்ணமாச்சாரி யரும் ஆழ்வார்கள் போன்று தெலுங்கு நாட்டில் விளங்கி யதை அறிகின்றோம். அதனால் இவரைத் தெலுங்கு ஆழ்வார் என்று போற்றலாம். இவரைப் பின்பற்றியே தெலுங்கு நாட் டில் பின்னர் 15-ஆம் நூற்றாண் டளவில் தோன்றிய தாள்ளப் பாக்கம் அன்னமாச்சாரியர் முத லானவர்கள் இசையுடன் பெரு மளவில் சங்கீர்த்தனங்களைப் பாடி வைணவத்தொண்டு புரிந் தனர்.

***

# புரட்டாசி கன்னிப் புனர்வசு

திரு. டாக்டர் தி.டி. முரளீதரன் - பம்பாய்.

தமிழ் மாதங்களான பன்னிரண்டு மாதங்களிலே புரட்டாசி மாதத்திற்குப் பல விசேஷங்கள் உண்டு. நம் பூர்வாசார்யர்களில் ஸ்வாமி நிகமாந்த மஹாதேசிகனும், அஹோபில மடம் முதல் பட்டத்தை அலங்கரணம் செய்த ஜீயர் ஸ்வாமியும், விசதவாக் சிகாமணியான நம் மணவாள மாமுனிகள் அஷ்டதிக் கஜங்களில் ஒருவரும் ப்ரதம சிஷ்யரான ஒன்றான வானமாமலை இராமானுஜ ஜீயரும் இம்மாதத்திலே வந்துதித்து ஸ்ரீவைஷ்ணவ மகா உலகத்திற்கு அரும் பெரும் தொண்டாற்றி உள்ளனர். திருமலையிலே திருவேங்கடவனுக்கு ப்ரம்மோற்சவமும் கொண்டாடுவது இம்மாதமே அன்றோ.

வானமாமலை இராமானுஜ ஜீயர் ஸ்வாமிகள் (பொன்னடிக் கால் பாதுகா ஜீயர்) புரட்டாசி மாதத்தில் சக்கரவர்த்தி திருமகன் அவதரித்த திருநக்ஷத்திரத்திலே அவதரித்தார். புனர்வசு நக்ஷத்திரம், இவருடைய திருநக்ஷத்திரமாகும். "புரட்டாசி கன்னிப் புனர்வசு" என்று எல்லோராலும் இவருடைய திருநக்ஷத்திரம் அழைக்கப்படுகிறது. பிரதிவருடமும் எல்லா ஊர்களிலும் குறிப்பாக மடத்து அபிமானிகள் இருக்கும் இடங்களிலும் வட இந்தியாவிலும் இத்திருநக்ஷத்திர வைபவம் விமர்சையாகக் கொண்டாடப்படுகிறது. வானமாமலையில் பத்து நாட்கள் நாலாயிரத்திவ்யப்பிரபந்த பாராயணங்கள், சதஸ் முதலியவைகளுடன் இக்கன்னிப் புனர்வசு உற்சவம் விமர்சையாகக் கொண்டாடப்படுகிறது. கன்னிப் புனர்வசு அன்று ஸ்ரீவரமங்காஸமேத தெய்வனாயக ஸ்வாமி, திருவீதிப் புறப்பாடாகி மடத்திற்கு எழுந்தருளப் பண்ணி, ஒன்றான ஸ்வாமியாலும், வர்த்தமான ஸ்வாமியாலும் ஷோடஸ உபசாரங்கள் செய்யப்பட்டு அன்று இரவு "மகர கண்டி" என்று சொல்லப்படும் விசேஷ திருவாபரணங்கள் பெருமாளுக்கும், தாயாருக்கும் சாத்தப்பட்டு, ஏகசிம்மாசனத்தில் பெருமாளும், தாயாரும் அரங்கநகர் ஸன்னிதியில் "வீற்றிருந்து தனிக்கோல் செல்ல" என்று ஆழ்வார் திருவாக்கு போல் வீற்றிருக்கும் காட்சியினைக் கண்டோம், கண்டோம், கண்டோம் கண்ணுக்கு இனியன கண்டோம் என்றே கூற வேண்டும்.

இங்குள்ள அரங்கநகரப்பன் திருவரங்கத்தில் இருந்து எழுந்தருளினமையால், இங்கும் திருவரங்கம் போல் அரங்கநகரப்பன், "தென்திசை இலங்கை நோக்கி" எழுந்தருளி உள்ளமை குறிப்பிடத்தக்கது.

முன் ஒரு நாள் வானமாமலையில் இருந்து வானமாமலை ஜீயரை வானமாமலை ஸ்ரீகார்யார்த்தமாக அனுப்பியருள வேணுமென்று ஸேனை முதலியார் ஸ்ரீமுகம் வர, அந்த ஸ்ரீமுகத்தை எதிர்கொண்டு சிரஸாவஹித்து உட்பட்டுக்கொண்டு அப்படியே ஸம்மதியாம்படி ஜீயர் நியமித்தருளி அவரையும் கூட்டிக்கொண்டு பெருமாள் திருமுன்பே சென்று இச்செய்தியை விண்ணப்பஞ் செய்து தாமும் திவ்யப்ரபந்தம் நாலாயிரத்திலே தினம் நூறுபாட்டு க்ரமத்திலே நித்யாநுஸந்தாநமாக அனுஸந்திக்கிறது. அற்றைக்குத் திருமொழி சாற்றுமுறையாய் "அணியார் பொழில்சூழ் அரங்கநகரப்பா" என்று அநுஸந்திக்கிற வேளையிலே பெருமாளும் அப்படியே ஸம்மதித்து தம்முடைய ஸந்நிதியிலே பூபால ராயனில் தட்டிலே யெழுந்தருளியிருக்கிற அரங்க நகரப்பனாகிய லக்ஷ்மீ நாராயணனான நாம், வானமாமலை ஜீயருக்கும், உமக்குமாக வருகிறோம்' என்று வானமாமலை ஜீயர் திருக்கையிலே எழுந்தருளப்பண்ணிக்கொடுக்க அவரும் ஜீயர் திருமுகமண்டலத்தைப் பார்த்து "பெரியார்க்காட் பட்டக்கால் பெறுத பயன்பெ

(17 -ஆம் பக்கம் பார்க்க)

# மகாபாரதத் துளிகள்

டாக்டர் கே.எஸ். நாராயணன் - திருநெல்வேலி.

உற்றார் உறவினர்களுக்கிடையே உண்டாகும் பகைமை மிகச் சிக்கலானது. அப்பகையைச் சமாளிக்கும் பாங்கை மகாபாரதம் இயம்புகிறது. பிறவியெடுத்த ஒவ்வொரு மனிதனுடைய வாழ்வும் ஓயாத ஒரு போராட்டம். நன்மை, தீமை ஆகிய இரு இயல்புகளுக்கிடையே மனிதன் சிக்குண்டு இன்ப துன்பங்களை அனுபவிக்க நேரிடுகிறது. பார்த்தனுக்குச் சாரதியாக விளங்கிய பரம்பொருள் ஒவ்வொரு ஜீவனின் மனத்துள்ளும் சாரதியாக வீற்றிருக்கிறார். ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் மகாபாரதப்போர் நிகழ்கிறது என்பது பகவத் கீதையின் அடிப்படைக் கருத்து. போர்க்களத்தில் தேர்த்தட்டில் இருந்தபடி "எப்பொழுதெல்லாம் அறம் அழிந்து போய் மறம் மேலெழுகிறதோ அப்பொழுதெல்லாம் என்னை நான் பிறப்பித்துக்கொள்கிறேன்" என்று கூறும் பரமாத்மா அர்ச்சுனனுக்குக் கூறுவது போல் நமக்கு ஆத்ம, ஞானம், கர்மம், சமநிலைநோக்கு ஆகியவற்றின் பொருளை விளக்குகிறார். கிருதயுகத்தில் தவம், சுத்தம், தயை, சத்யம் என தரும தேவதைக்கு நான்கு பாதங்கள் இருந்தன. அதர்மப்பகுதியாகிய கர்வம், பற்று, மதம் ஆகிய மூன்றினாலும் மூன்று பாதங்கள் அழிக்கப்பட்டு விட்டதால் சத்யம் என்ற நாலாவது பாதத்தால் நடமாடி வரும் தரும தேவதையை அசத்தியத்தால் வளர்ந்துள்ள கலிபுருஷன் நாசமாக்க முயலுகிறான் என்று கூறுகிறது ஸ்ரீபாகவதம். காமத்தினால் விளையும் கேட்டை விளக்குவது ராமாயணம் என்றும், அளவுகடந்த பொருளாசை அழிவுக்கு வித்தாகும் என்பதை வலியுறுத்துவது மகாபாரதம் என்றும் நாம் அறிவோம். மகாபாரதம் சம்பந்தப்பட்ட கீழ்கண்ட கேள்விகளின் விடைகளை நீங்கள் அறிவீர்களா?

*****

1. நர, நாராயணர் எனப்படுபவர் யார்?
2. தீமையைக்காக்க வல்லமை பொருந்திய மகா புருஷர்களால் கூட இயலாது என்பதை யார் மூலம் மகாபாரதத்திலிருந்து அறிகிறோம்?
3. வனபர்வத்தில் அகஸ்தியரின் சாபத்தால் மலைப்பாம்பாக வடிவெடுத்திருந்த நகுஷ மன்னன் "எதை அறிந்தால் மானிடன் அனைத்தையும் அறிந்தவனாகிறான்?" என்று கேட்ட கேள்விக்கு யுதிஷ்டிரன் அளித்த பதில் என்ன?
4. ஆரியன் என்ற சொல்லின் பொருள் என்ன?
5. சொர்க்கத்தையும், நரகத்தையும் சிருஷ்டிப்பவர் யார் என்று யட்சன் தடாகக் கரையில் கேட்ட கேள்விக்கு யுதிஷ்டிரன் அளித்த பதில் என்ன?
6. மகாபாரதப் போரில் பலராமன் யார் பக்கமிருந்து போரிட்டான்?
7. ஆரியனுக்குப் பொருந்தாததும், சுவர்க்கத்தைத் தடுப்பதும் புகழைப்போக்குவதும் எது என்று பகவத்கீதையில் கண்ணபிரான் கூறுகிறார்.
8. போரில் வெல்லமுடியாத துரோணரை வெல்லும்வழி யாரால் தெரிவிக்கப்பட்டது.

9. வனவாசத்தின் போது திரௌபதியைப் பலவந்தமாகத் தூக்கிச் செல்லமுயன்ற ஜயத்ரதனைப் பாண்டவர்கள் அவமானப்படுத்தவே, அவர்களைப் பழிவாங்க ஜயத்ரதன் சிவனைக் குறித்துத் தவம் செய்ய பரமசிவனும் அகமகிழ்ந்து அவனுக்கு ஒரு வரம் அளித்தார். அந்த வரம் என்ன?

10. துரியோதனனும் அர்ச்சுனனும் போர்க்களத்தில் முதன்முதலில் சந்தித்துப் போரிட்டது எப்போது?

11. மகாபாரதப் போர் விவரங்களை திருதராஷ்டிர மன்னன் எவ்வாறு அறிந்தான்?

12. ஸ்ரீகிருஷ்ணன் அவதரித்த விருஷ்ணி வம்சத்திற்குச் சாபமிட்டவர் யார்?

13. கர்ணனுக்கு இந்திரன் வழங்கிய சக்தி வேலாயுதத்தைக் கர்ணன் யாரை அழிக்க ஏவ வேண்டி நேரிட்டது?

14. இளஞ்சிங்கம் எனப்போற்றப்பட்ட அபிமன்யுவின் இறப்புக்கு மூல காரணமாக அமைந்தது யார்?

15. "அன்பு வல்லமை மிக உடையது. ஆக்கத்துறையில் மனிதனை அழைத்துச்செல்லும் சக்தி வாய்ந்தது அது. வீழ்ந்து கிடப்பவனை மீட்க உதவுவது அன்பு" என்பது யார் கூற்று?

16. ஞானிகள் எனப்படுவோர் எப்படிப்பட்டவர் என ஸ்ரீபகவான் அர்ச்சுனனுக்கு கீதோபதேசத்தின் போது கூறுகிறார்?

17. மனிதனின் அழிவு எதனால் ஏற்படுகிறது என்று ஸ்ரீகிருஷ்ணன், போர்களத்தில் அம்பையும் வில்லையும் எறிந்து விட்டு என் உறவினர்களுடன் எவ்வாறு போரிடுவேன் எனத்துயருடன் இருந்த அர்ச்சுனனுக்கு, விளக்கினான்?

18. தவம், தத், ,ஸத் என்ற சொற்கள் எவற்றைக் குறிக்கின்றன?

(29-ஆம் பக்கம் பார்க்க)

---

(15-ஆம் பக்கத் தொடர்ச்சி)

றுமாறு" என்று விண்ணப்பஞ் செய்ய, பெருமாளும் தீர்த்தம், திருப்பரியட்டம், திருமாலை, அபயஹஸ்தம் முதலான வரிசைகளும், ஸ்ரீசடகோபனும் ப்ரஸாதமும் ஸாதித்து விடைகொடுத்தருள, ஜீயரும் மங்கள வாத்தியங்களுடனே அரங்க நகரப்பனை ஏழுந்தருளப் பண்ணிக் கொண்டு மடத்திலேயெழுந்தருளி அமுது செய்தருளினவுடனே ஜீயரை வாழ்த்தி அரங்கநகரப்பனை ப்ரஸாதித்து வானமாலைக்கு அனுப்பியருளினார். அரங்கநகர்அப்பன் திருவரங்கத்தில் இருந்து எழுந்தருளினமையால் திருவரங்கம் போல் "தென்திசை நோக்கி" இங்கும் அரங்கநகர் அப்பன் எழுந்தருளி உள்ளமையை இங்கு நேரிற் சென்றவர்கள் அறிவார்கள்.

மணவாளமாமுநிகளின் உத்தரவின் பேரில் அவருடைய கணையாழியும், உபதண்டமும் பெற்று ப்ரதம சிஷ்யராய் விளங்கி

"தாப: புண்ட்ரஸ் ததாநாம
மந்த்ரோ யாகஸ்ச பஞ்சம:"

என்கிறபடி பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்தருளின அவருடைய பணி ஓராண் வழிக்கிரமமாக, தற்போது 29-ஆம் பட்டத்தை அலங்கரிக்கும் நம் வர்த்தமான ஸ்வாமியான பட்டர்பிரான் இராமாநுஜ ஜீயர ஸ்வாமி பர்யந்தம் அவிச்சின்னமாக தொடர்ந்து நடைபெற்றுவருகிறது. மேன்மேலும் நம் இராமாநுஜ சித்தாந்தம் பாரில் உள்ளோருக்கு பகரும் வண்ணம், வானமாமலை ஜீயர் ஸ்வாமிகள் எழுதின நூல்களை நாம் மறுபதிவு செய்து எல்லோருக்கும் கிடைக்கும்படிச் செய்ய வேண்டும். நம் திருமலை திருப்பதி தேவஸ்தானம் திவ்ய ப்ரபந்த ப்ராஜெக்ட் ஒன்று ஆரம்பித்து அரும்பெரும் தொண்டாற்ற முன் வந்துள்ளது. திருவேங்கடவன் அவர்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் கொடுக்குமாறு பிரார்த்தித்து, "கன்னிப் புனர்வசு" உற்சவம் காண "தொண்டீர் எல்லீரும் வாரீர் வாரீர்" என அழைத்து வானமாமலை திவ்ய க்ஷேத்திரம் செல்வோமாக. *

# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் யாத்ரிகர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மின்சாரம் மற்றும் தண்ணீர் வசதி களுடன் கூடிய அறைகள் கொண்ட சத்திரங்கள் உள்ளன. இத்தங்கு வசதிகளைப் பெற திருமலை பேருந்து நிலையத்திற்கு அருகே உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தை அணுகவும். மேலும் யாத்தரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வகையில் கொட்டகைகள் மற்றும் கூடங்களும் உண்டு. கட்டணம் செலுத்திப் பெறப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில், செய்து தரப்படும்.

முன்கூட்டியே தங்கு வசதிகளுக்காக பணம் செலுத்திப் பெயர் பதிவு செய்து கொள்ளும் யாத்ரிகர்கள் தங்கு வசதிகளுக்கான கட்டணத்தை காசோலை (D.D.) மூலம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக்காசோலையினை அல்லது எம்.ஓ. ரசீதினை திருமலைக்கு வரும் தேதி, தங்கும் நபர்களின் எண்ணிக்கை, செலுத்திய தொகை ஆகிய விவரங்கள் அடங்கிய கடிதத்துடன் இணைத்து குறைந்தது பத்து நாட்களுக்கு முன்பேயே, உதவி செயலாட்சித் தலைவர் (Asst. Executive Officer) வரவேற்பு I (Reception I) தி.தி. தேவஸ்தானம், திருமலை-517504 எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப்போக்குவரத்து ஆங்கிலத்தில் இருத்தல் அவசியம்.

## தங்கு வசதிகளுக்கான கட்டண விவரங்கள்:

1) ஹில் வ்யூ பாதிக்குடில்கள், சங்குமிட்டா, சேஷாத்ரி நகர், அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்

ஒரு பகுதி (ஹீட்டர் இல்லாதது) ரூ. 15/-
எச்.வி.டி.சி. அறைத்தொகுதிகள் (Suites)
(ஒவ்வொன்றும்) ஹீட்டர் உள்ளது ரூ. 25/-
எச்.வி.சி. விருந்தினர் விடுதியின்
பெரிய அறைத்தொகுதி ரூ. 50/-
(ஹீட்டர் உள்ளது)
எச்.வி.சி. விருந்தினர் விடுதியில் சிறிய
அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 25/-

மேற்கூறிய தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்தல் வேண்டும்.

2) மங்களபாவி குடில்கள், டி.பி.சி. 3-வது வரிசை முதலியன.

டி.பி. வெளிப்பகுதி குடில்கள் ரூ. 60/-
(ஹீட்டர் உள்ளது)
வி.வி.சி., எம்.பி.சி. 31 மற்றும் 26 ரூ. 70/-
எம்.பி.சி. (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-
டி.பி., ஏ.டி.சி. அறைத்தொகுதிகள்
(ஹீட்டர் உள்ளது) ரூ. 15/-
ஏ.டி.சி. கீழ்த்தளம், முதல் தளம்,
'ஏ' 'பி' 'சி' மற்றும் 'டி' பகுதிகள்
(ஒவ்வொன்றும்) ரூ. 30/-

ஆர்ஜித சேவை செய்யும் கிருகஸ்தர்களுக்கு மட்டுமே முன்பதிவு

3) எஸ்.வி. விருந்தினர் விடுதி மற்றும் என்.ஜி.ஜி. விடுதியில் உள்ள ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் முன்பதிவு இல்லை. ரூ. 50/-

4) பயணிகள் மாளிகையின்
உட்புறக் குடில்கள் ரூ. 70/-
சிறப்பமைப்புக் குடில்கள் ரூ. 100/-
எச்.ஆர்.ஜி. குடில்கள் ரூ. 250/-

முன்பதிவு இல்லை. காலியாக இருப்பின் ஒதுக்கப்படும்.

5) ஹில் வ்யூ சொகுசு குடிலில் மோடிபவன்.
ஓர் அறைத்தொகுதிக்கு ரூ. 250/-
ஸ்ரீநிகேதன் விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒவ்வொன்றுக்கும் ரூ. 250/-
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-
இந்திரா விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒன்றுக்கு ரூ. 250/-
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ.1000/-
பாலகுடீரம் ஒரு அறைத்தொகுதி ரூ. 250/-
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ.1500/-
ஸ்ரீபத்மாவதி விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
முதல்தளத்தில் பெரிய அறைத்தொகுதி மற்றும் கீழ்த்தளத்தில் அறைத்தொகுதி(ஒன்று) ரூ. 750/-
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-
கோகுலம் விருந்தினர் விடுதி
(குளிர்ச் சாதனம் பொருத்தப்பட்டது)
அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500/-
ஸ்ரீநிவாசா நிலையம்
அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500/-

ஸ்ரீநிவாசா நிலையம் விருந்தினர் விடுதி
முழுவதும் ரூ.2500/-
வித்யா சதன்
பெரிய அறைத்தொகுதி ரூ. 750/-
வித்யா சதன் மற்றைய அறைத்தொகுதி ரூ. 500/-
கோதாவரி சதன்
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-
காம்பெல் விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ.1000/-

முன்பதிவு கிடையாது. காலியாகும் தங்கு வசதிகளைப்பொறுத்து ஒதுக்கப்படும்.

தயைகூர்ந்து "உதவி செயலாட்சித்தலைவர், (வரவேற்பு) தி.தி.தே., திருமலை" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

6) திருமணக் கூடங்கள்
சங்குமிட்டா குடில்கள் கிழக்கு
எண். 272, 260, 266, 267, ரூ. 100/-
டி.பி. குடில் எண். 71 வரிசை III
எண்கள் 136 மற்றும் 152 ரூ. 100/-
ரூயா குடில், கோகினேனி குடில்
மற்றும் ஏ.டி.சி. எண். 99 ரூ. 100/-
சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 100/-
ஸ்ரீசீதாராம திருமண மண்டபம் ரூ. 1000/-

முன்பதிவுக்கு உதவி செயலாட்சித்தலைவர், (ஆர்.) தி.தி. தேவஸ்தானம், திருமலை எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ராம் பகீச்சா விருந்தினர் விடுதி
சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ரூ. 50/-
(அறைத் தொகுதி ஒன்றிற்கு)

விதிகள்:- * ஒருநாள் என்பது இடவசதி வழங்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்கள்.
* தேவைப்படும் இடவசதி வழங்கப்பட முடியாவிட்டால் வேறு தங்கு வசதி செய்து தரப்படும். இதனால் செலுத்தப்பட்ட தொகை அதிகமாக இருப்பின் வித்தியாசப்படும் தொகை திருப்பித் தரப்படும்.
* கூட்டம் அதிகமாக இருக்கும் நிலைகளில், தங்கு வசதி ஒருநாளைக்கு மட்டுமே வழங்கப்படும்.
* ஒதுக்கப்பட்ட கால நேரத்திற்கு மேலாக தங்கு வசதிகளைப் பயன்படுத்தினால் நிர்ணயிக்கப்பட்ட தொகையினைப் போல் மூன்று மடங்கு தொகை அபராதமாக வசூலிக்கப்படும்.
* மேலே குறிப்பிட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக்கூடியன.

# திருப்பதியில் தங்கு வசதிகள்

## இலவச தங்கு வசதிகள்:-

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடக்குப்புறத்தில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜ தர்மசாலை மற்றும் ஸ்ரீகோதண்டராம தர்மசாலைகளில் மேஜை, நாற்காலி வசதி இல்லாத, ஆனால் சமையல் செய்து கொள்ளும் வசதிகளுடன் கூடிய இடவசதிகள் உள்ளன. யாத்திரிகர்கள் இவ் இடவசதிகளுக்காக தர்மசாலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20991

## மேஜை, நாற்காலிகளுடன் கூடிய இடவசதிகள்:-

ஸ்ரீவேங்கடேஸ்வரா தர்மசாலை (இரயில் நிலையத்திற்கு எதிரில்)

சிறியது ரூ. 20/- பெரியது ரூ. 30/- நான்கு படுக்கைகளைக்கொண்டது ரூ. 40/-
கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20103

இரயில் நிலையத்திற்கு வடக்குப்புறம் உள்ள ஸ்ரீவேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி:

அறைத்தொகுதி ஒன்று ரூ. 30/-
உதவி செயலாட்சித்தலைவர், (வரவேற்பு) திருப்பதி' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.
தொலைபேசி எண். 20166

ஸ்ரீபத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்சாதன வசதியுடன் கூடியது) சித்தூர் சாலையில் உள்ளது.

பெரிய அறைத்தொகுதி ரூ. 65/- சிறிய அறைத்தொகுதி ரூ. 40/-

திருப்பதியிலுள்ள உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலைபேசி எண். 20103

# தெலுங்கு இலக்கியத்தில் நத்(க்)கீரன் கதை

முனைவர் கோவி. நரசிம்மன் - அனந்தபுரம் (ஆ.மா.)

தூர்ஜடி தெலுங்கு மகா கவி. இவர் ஸ்ரீகிருஷ்ண தேவராயர் அவையை அலங்கரித்த அஷ்டதிக்கஜங்களுள் ஒருவராவர். இவருடைய பிறப்பு, வளர்ப்பு, இனம் முதலிய வரலாறுகளைப் பற்றி அறிய சான்றேதுமில்லை. ஸ்ரீகாளஹஸ்தி மஹாத்மியம், ஸ்ரீகாளஹஸதி சதகம் எனும் இரு நூல்களை இவரியற்றினார். ஸ்ரீகாளஹஸ்தி மஹாத்மியத்தில் நத்கீரன் கதை இடம் பெற்றுள்ளது. தமிழில் நக்கீரர் என வழங்கப் பெறும் இப்புலவரே தெலுங்கில் நத்கீரர் என அழைக்கப் பட்டார்.

அறுபத்து நான்கு கலைகளைக் கபட நாடகம் வழி விளக்கும் வாலவாயி சொக்கநாதர் அவதரித்த பூமியாகவும் அவன் சதியான மீனாட்சி எனப் பெயர் பெற்று இலங்கும் பார்வதி தேவி ஆட்சி செலுத்தும் இடமாகவும் மதுரா நகரம் சிறப்புடன் விளங்கிற்று. அங்கே திராவிட மொழிக்குரிய சங்கப் பலகையும் தாமரைத் தடாகமும் இருந்தன. அதோடு மட்டுமின்றித் தென் கடலுக்குத் துணைவியான தாமிரபரணியும் அதனெதிரே வைகையும் ஓடி வளஞ்செயா நின்றன.

அந்நகர மக்கள் எவ்விதக் குறையுமின்றி இன்பமுடன் வாழ்ந்து வந்தனர். மேலும், பாண்டிய மன்னனுக்குச் சிவன் மருமகனாக வாய்த்தான் எனக் கூறுமளவிற்கு அந்நகரம் எழில் பெற்று விளங்கிற்று. அந்நகரத் தாமரைத் தடாகத்தின்மீது பாண்டியன் மகளான மீனாட்சி தேவி எழிலுடன் வீற்றிருந்தாள். அவளுக்கு மாணிக்கவல்லி, மரகதவல்லி, ஆனந்தவல்லி, அமுதவல்லி, கற்பூரவல்லி, கற்பக வல்லி முதலிய பெயர்கள் இருந்தன. தன்பெயரில், தன்னருளை தன் பிரசாதத்தில் கொடுத்துக் காப்பாற்றும் மீனாட்சி தேவியைப் பெண்கள் புகழா நின்றனர்.

அன்னைக்குப் பூசை செய்ய வந்த பெண்கள் ஈசுவரன் தன் மனைவியை எவ்வாறு அழைக்கின்றனோ அவ்வாறே, 'ஏ! கற்பகவல்லி வா, அமிர்தவல்லி போ, கற்பூரவல்லி, மாணிக்கவல்லி, ஆனந்தவல்லி, மீனாட்சி'. என ஒருவரையொருவர் தம்முள் அழைத்துக் கொண்டனர்.

மதுரை நகரத்தை பாண்டிய மன்னன் ஆட்சிபுரிந்து வந்தான். அவன் பராக்கிரம சாலியாகவும் நடுவுநிலைமை தவறாத ஆட்சியாளனாகவும் தன்னைப் பொருவும் மன்னர்களுக்குக் கதிரவனை யொத்தும், தேவேந்திரனைவிட மிகுந்த புகழும், தானம் செய்வதில் இரண்டாவது கர்ணனாகவும், கடலைப் போன்று கம்பீரம் உடையவனாகவும் விளங்கினான்.

திராவிட மொழியிலுள்ள இலக்கணம், அகராதி, அலங்காரம், கவிதை செப்புதற்குரிய இலக்கியக் கொள்கைகள் ஆகிய வற்றை நிர்ணயிக்கும் பொருட்டுப் பதினெட்டு எழுத்துக்கள் அடங்கிய சங்கப் பலகையை அகத்திய மாமுனி இமய மலையிலிருந்து கொணர்ந்து பாண்டிய மன்னனுக்குக் கொடுத்து, "கேள், இது திராவிட மொழிக்குரியது. கல்வியிற் பெரிய சரஸ்வதிதேவியை ஒப்பவர்க்கு எத்துணையராயினும் இது இடமளிக்கும். குறைந்தது ஒருவரையும் உச்சளவு எத்தனை பேரையும் அமர்த்திக்கொள்ள இடமளிக்கும். இதை நீ முறையாக வைத்துப் பூசை செய்வாய்'' என எடுத்துரைத்தார்.

பாண்டியரும் பரம்பரை பரம்பரையாக அவ்வாறு பூசித்து வந்தனர். கலியுகம் வந்தது.

அக்காலத்தில் ஒரு பாண்டியன் பிறந்தான். பூமியைத் தாங்குவதில் எட்டுதிக்குகளைச் சுமக்கும் யானையைப் போன்றும் காத்தற்றொழிலில் கூர்ம, வராகவதாரம் எடுத்துத் திருமால் இவ்வுலகைக் காத்தற் போன்றும் அவன் விளங்கினான்.

"ஆ ராஜு பாண்டிய தாத்ரீ
தௌரம்தர்ய பிரமோதிதக்ராவ ஹரி
த்வாரண புஜங்கபதி பூ
தார கமட்ட பரிவ்ருட ப்ராதிதாநிதி"

(ஸ்ரீ.கா.ம.பா. 13)

அவன், அமிழ்தம் போன்ற சொல்லுடைய காவியம் இயற்றவல்லோரையும் சைவசித்தாந்தத்தில் கடலையொத்த அறிவுடையோரையும் நீரைவிடுத்துப் பால் அருந்தும் அன்னம் போன்ற நக்கீரர் உட்பட பன்னிரண்டு புலவர்களையும் சங்கப் பலகையின் உறுப்பினர்களாக நியமித்தான். அது பார்ப்பதற்குச் சரஸ்வதி தேவியின் கழுத்தை அலங்கரிக்கும் 'கண்டாபரணம்' எனும் அணியையொத்து விளங்கிற்று. அச்சபையில் சங்கப் பலகையின் மீது அமர்ந்து எவரேனும் தம் பாடலை அவையோர் மெச்சும் அளவில் பாடிக்காட்டினால் ஆயிரம் தங்கக்காசுகள் பெறுதற்குரியோராய் மதிக்கப்பெற்றனர்.

அவ்வாறு பாண்டிய மன்னன் ஆண்டு வருங்காலத்தில் கொடிய பஞ்சம் தோன்றியது. மழை பொய்த்ததால் மக்கள் வருந்தினர். மீன இராசியில் சனி புகுந்ததாலும் கிழக்குத்திசையில் வால் நட்சத்திரம் தோன்றியதாலும் பஞ்சமேற்பட்டது. அப்போது மேகக்கூட்டங்கள் மழையின்றி வானில் திரிந்தன. மழைத்துளியைத் தவிர மழை அரிதாக இருந்தது. காற்றும் சூரிய ஒளியும் மழையை இல்லையெனச் செய்தன. அந்நேரத்தில் தென் பகுதியில் இடியும் மின்னலும் மிகுந்திருந்தது.

குனுகுலு, ஊதர்லு முதலான அரிசி வகைகளும், அல்லியரிசி, மூங்கிலரிசி முதலிய சிறிய அரிசி வகைகளும் துங்கக்கிழங்கு, ஈத்திலைக் குருத்து ஆகியனவற்றையும் மக்கள் உணவுக்காகப் பயன்படுத்தினர். ஏற்றமிறைத்து பயிர் செய்து அறுபது நாட்களில் வந்து சேரவேண்டிய கேழ்வரகும் பூச்சிப்பட்டு அழிந்தன.

இடைநிலை வாழ்க்கைத் தரத்தார் எலும்பும் தோலுமாக இருந்தனர். தள்ளினால் தொன்னூறு இடங்களில் விழுபவராக மெலிந்து இருந்தனர். ஆடவர் தம் இல்லாளை விடுத்து, செல்வம் பொருட்டு ஊர்விடுத்து இடம் பெயர்ந்து சென்றனர். கொடிய கலியானது மக்களை மட்டுமின்றி மன்னனையும் வாட்டியது.

தின்பதற்குச் சிறியதளவே உணவு கிடைப்பினும், அதைத் தின்றபின் பருகுவதற்கு நீரின்மையால் உலக உயிர்கள் தம் இன்னுயிரை இழந்தன. ஒரு சிலர் உணவெடுத்து அருந்த வியலாதலால் இறந்தனர்; பலர் ஊர் பெயர்ந்து வேற்றூருக்குச் சென்றனர். பஞ்சம் தலைவிரித்தாடியதால் அவ்வூரில் வாழ்ந்த சிவ அந்தணனும் ஊரைவிட்டுச் செல்ல பயணமானான். அப்பொழுது சிவன் அவர்முன் தோன்றி,

"யானையைப்போன்ற நடையுடைய
பெண்ணின் கூந்தல்
இயற்கையின் நறுமணம் உடைத்து"

"சிந்தூர ராஜகம நாதமில்ல
பந்தம்பூ சஹஜ கந்தம்"
(ஸ்ரீ.கா.ம. பா. 27)

எனும் பொருள் பொதிந்த பாட்டை அந்தணனிடம் கொடுத்து இதை 'மன்னனிடம் கொடுப்பாயாக. அரசன் இப்பாட்டைப பாரதததும நிறைய பொன்னும் பொருளும் உமக்கு அளிப்பான். அதோடு மட்டுமின்றி வான் செழித்து மழை பொழிந்து நாடு நன்னிலை உறும்' எனவும் உரைத்தார். அந்தணன் பாட்டுடன் சபைக்குச் சென்றான்.

சிவ அந்தணன் கொணர்ந்த பாட்டைக்கேட்டு அவையோர் ஏளனம் செய்தனர். சங்கப் பலகையின் முதன்மைக் கவியான நக்கீரரும் 'பெண்களின் கூந்தலுக்கு இயற்கையிலேயே மணம் இல்லை' என வாதித்தார். அதைக் கேட்ட அந்தணன் "இப்பாட்டைப் பரமேசுவரன் கொடுத்தான்; இதன் கண் உள்ள பிழையை நான் அறியேன்' எனக்கூறி, சுருங்கிய முகத்துடன் திரும்பி வந்து ஈசுவரனிடம் இவ்வாறு உரைத்தான். "உன்னை நம்பினதால் பெரும் இழிவுக்கும் ஏய்ப்புக்கும் ஆளானேன். நானே சொந்தமாகப் பாட்டெழுதியிருந்தால் இப்பிழை நேர்ந்திராது. உன் பேச்சைக் கேட்டதால் வறுமையைவிடப் பெரிதும் துன்புற்றேன். உன்னையோ, நக்கீரனையோ குறை கூறிப் பயனில்லை; எல்லாம் என் தலைவிதி' என வருந்தி, செல்வதற்கு விடைவேண்டி நின்றான். இவ்வார்த்தையைக் கேட்ட இறைவன், அவ்வந்தணனோடு அவையை அடைந்து நக்கீரனை வாதிற்கு அழைத்தான். "அரசன் மீது நானியற்றிய பாடலைத் தன்னால் இயற்றமுடியவில்லையே எனும் பொறாமையின் காரணமாக இப்புலவன் கொணர்ந்த பாட்டினைக் குறை கூறினாயோ?"

என நத்கீரனை இறைவன் வினவினான். அதற்கு நத்கீரர், "நீர் அனுப்பிய பாட்டில் பொருட்பிழை உள்ளது. பார்வதி தேவிக்கு வேண்டுமானால் கூந்தலில் மணம் இருக்கலாம். ஆனால் இவ்வுலகப் பெண்களின் கூந்தலில் இயற்கையிலேயே மணம் இல்லை" என வாதித்தார். அப்போது இறைவன் தனது மூன்றாவது கண்ணைத் திறந்து காட்டினான். 'ஐய, நீர் மூன்றாவது கண் மட்டுமின்றி தலைமுழுவதும் கண்ணுகக் காண்பித்த போதிலும் குற்றம் குற்றமே' என நத்கீரர் உரைத்தார். பின்பு சிவன் கோபமுற்று 'தொழுநோயால் துன்புறுக' எனச் சபித்தார். அப்போது நத்கீரர் மிக அஞ்சி இறைவன் திருத்தாள் மீது வீழ்ந்து, வணங்கி சாபம் நீங்குதற்குரிய வழியைக் கேட்டார். 'நீ கைலயங்கிரியைத் தரிசித்தால் சாபவிமோசனம் கிடைக்கும்' என ஈசன் அருளினார்.

புலி, கரடி முதலிய விலங்குகளும் பாம்பு முதலிய விஷப் பூச்சிகளும் எந்நாளும் திரியும் கைலாச மலையை நான் எப்போது சென்று சேருவேன் என வருந்தி, கைலாயம் நோக்கி நத்கீரர் பயணமானார். ஜம்புகேஸ்வர லிங்கத்தைத் தரிசித்தார். பின் காவிரித் துறைமூழ்கி பாவங்களைத் தொலைத்து வழியெங்கும் தீர்த்தமாடிச் செல்வராயினார்.

கங்கையைக் கடந்தபின் சிறிது தூரம் காலாலும் சிறிது தூரம் கையாலும் குருதி வழியும் உடலுடன் பயணம் செய்தார். போகும் வழியில் ஒரு குளத்தைக் கண்டார். அதன் கரையில் ஆலமரம் ஒன்று இருந்தது. அம்மரத்திலிருந்து உதிர்ந்து விழும் இலைகள் நீரில் விழுந்தால் மீனாகவும் நிலத்தில் விழுந்தால் பறவையாகவும் மாறும் காட்சியை நத்கீரர் கண்ணுற்றார். ஓரிலை பாதி நிலத்திலும் பாதி நீரிலும் படும்படி விழவே பாதி பறவையாகவும் பாதி மீனாகவும் மாறி இருபுறம் இழுக்கத் தொடங்கின. இது கண்டு நத்கீரர் வியப்பெய்தினார். அப்போது கொடூரமான பூதம் தோன்றி நத்கீரனை எடுத்துச் சென்று குகையில் அடைத்து, நத்கீரனோடு சேர்த்து நூற்றுவரைத் தின்ன மனங்கொண்டு நீராடி வரப் பொய்கைக்குச் சென்றது. அப்போது நத்கீரர் உமையொரு பாகனின் இளைய மகனை யெண்ணித் துதிக்க, செவ்வேள் தோன்றி, தன் இடக்கையால் குகையைத் திறக்க அனைவரும் விடுதலை பெற்றனர்.


ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயில் ஆந்திர ஆஷ்ரமம் - ரிஷிகேஷ்.

நத்கீரர் தான் செய்த தவற்றை முருகனிடம் எடுத்துரைத்து கைலாய மலைக்குச் செல்லும் வழியைக் கேட்டார். 'ஈசன் கைலை மலைக்குச் செல் எனக்கூறினாரேயொழிய வடகைலையா தென் கைலையா எனக் கூறவில்லை. தென்கைலையைத் தரிசித்திருந்தால் இந்நோய் நீங்கியிருக்குமே' எனக் குமரன் மனத்துள் எண்ணினான். பின், 'எதிரே தெரியும் குளத்தில் நீராடினால் தொழுநாய் போகும்' என உரைத்தான். உடனே நத்கீரன் நீராட , தொழுநோய் நீங்கியது. பொன்னிற கைலையும் அதன்பின் இறைவனும் எதிரே தோன்றினான். நத்கீரர் தன் தவறுணர்ந்து மனம் திருந்தி ஈசனைப் புகழ்ந்து போற்றினார்.

***

# துலாக் காவேரி

திரு. எஸ்.வி. ரமணி - மயிலாடுதுறை.

ழ்குவோர்தம் எண்ணத்தை றவேற்றி முக்தியளிக்கக் டிய காவேரியின் பொருள் க்கம்.

காகார அஃதாவது 'ஆ' மானது பாவத்தை ஒழிக் . 'வே' கார 'ஏ' காரமா து அபிஷ்டத்தைக் கொடுக் . (அதாவது பிரியமானதை) 'ர' கரமானது மோட்சத்தை அளிக்கும். மேலும் காவேரி என்பதற்குச் சில பொருள்களும் உண்டு. 'கா' என்பதற்கு பாது காப்பு என்றும், சோலை என்றும் பொருள் உண்டு. 'வி' (வேவானது) பறவை என்றும், அழகு என்றும், விசை என்றும் பொருள்படும். 'ரி' என்பதற்குப் பறந்து விரிந்தது, மாறியது என்றும் பொருள்படும். அஃதாவது சோலை போல, அழகுடன் அதேசமயம் விசையுடனும் நதியினைப் போல பறந்து விரிந்து பெண்ணுகப் பிறந்தவள் நதி ரூபமாக மாறியதையும் குறிக்கின்றது. இப்படிப்பட்ட காவேரியின் பெருமையைச் சொல்லி முடியாது என்பதை அறிக என்று பிரம்ம தேவன், அதன் பெருமையைச் செந்தாமரைக் கண்ணனான திருமாலே அறியவல்லான் என்றுரைத்தார்.

துலாக் காவேரி ஸ்நாநம் செய்ய வேண்டிய முக்கியமான இடங்கள் தலைக் காவேரி (குடமலை), ஸ்ரீரங்கம், திருவானைக்கா, திருவையாறு, கும்பகோணம், திருவிடைமருதூர், மயிலாடுதுறை, திருச்சாய்க்காடு, கடலில் சங்கமாகும் காவேரி புகும் பட்டிணம் (பூம்புகார்).

துலாம் என்ருல் மாதங்களில் ஐப்பசி என்றும், எடைகோல் தராசு என்றும் பெயர். துலா ஸ்நாநத்திற்கு சிறந்த ஊராகிய மயிலாடுதுறை ரிஷப தீர்த்தக் கட்டத்தில் காவேரியின் நடுவில் ஒரு மண்டபம். அது உத்திர, தக்ஷிண மாயூரங்களைப் பிரிக்கும் தராசின் முள் போல் உள்ளது. அதனுள் தக்ஷிண மாயூரத்தில் அம்பாள் மயில் ரூபமாக சிவனைப் பூஜித்ததற்குச் சான்ருக மயில் வடிவமும், பரமசிவன் வாகனமாகிய ரிஷபம் கர்வம் கொண்டதன் காரணமாக உத்தர மாயூரத்தில் ஸ்ரீவதான்யேஸ்வரன் பெருமானை வழிபட்டு துலா அமாவாசையன்று ஸ்ரீவதான்யேஸ்வரர் ஸ்ரீமேதா தக்ஷிணுமூர்த்தி வடிவில் வந்து, அவரது கர்வத்தை அகற்றி மன்னித்து, மீண்டும் வாகனமாக ஏற்றுக கொண்டதற்குச் சானருக ரிஷபமும் உள்ளது. அதே ரிஷப தீர்த்தத்தில் கங்கைக்கு பாவ விமோசனம் கொடுத்து அருள் புரிந்த இடம்தான் துலாக் காவேரி ஸ்நாந கட்டம்.

நம் நாடான அயோத்தியிலேயே, மன்னன் சுதர்சனன் என்ற பிராமணன் ஒருவன் இருந்தான். அவனுடைய தந்தை, தாய் இறந்த பின்னர் தன் இஷ்டப்படி நடக்கத்தொடங்கினான். துஷ்ட வேசியருடன் கலந்து, இச்சையென்னும் நிமிட இன்பக்கடலில் மூழ்கிக் கரை காணுது தடுமாறி வாழ்ந்து வந்தான். சில காலங்களுக்குள் தன்னிடம் இருந்த பொருள்கள் அனைத்தும் தீர்ந்து விடவே, அவனை வறுமை வாட்டியது, பாவம் விரட்டியது. இந்நாட்டை விட்டு வெளியேறித் தென்னாடு புகுந்து பல இடங்களிலும் சுற்றி அலைந்து பின், ஒரு நாள் துலா மாதம் கௌரி மாயூரமென்னும் தலத்தினை வந்தடைந்தான். காவேரி நதியில் அனைவரும் நீராடுவதைக் கண்ட அவன், தானும் நீராடி மாயூரநாதனையும், மயில் உருவாக பூஜித்த அபயாம்பிகையும் தினந்தோறும் பூஜித்து வந்தான். இங்ஙனம் தினந்தோறும் செய்து வருகையில், அவன் காலம் முடியவே, ஒரு நாள் உயிர் துறந்தான். இறந்தவனை யமபடர்கள் கால பாசத்தால் கட்டி இழுத்துச் சென்றனர். இடையில் நான்கு சிவ கணங்கள் தோன்றிக் கட்டவிழ்த்து, அவனை விமானத்தில் ஏற்றி கைலாயத்

திற்கு அழைத்துச்சென்றனர். அதனைக் கண்ட யமதூதர்கள் ஆச்சரியத்துடன் யமனிடம் சென்று நடந்ததைக் கூறினார்கள். உடனே யமன், 'துலாக் காவேரி ஸ்நாநத்தினாலும், மயூரநாதர், அபயாம்பிகை தரிசனத்தாலும் சுதர்சனம் பாவம் நீங்கி பரிசுத்தமானான். அதன் காரணமாக சிவலோக வாழ்வு பெற்றான். ஆதலால் காவேரி தீர்த்தம் எல்லா பாவங்களையும் போக்கி பரிசுத்தமளிப்பதும் என்பதனை அறிவீர்களாக' என்று கூறினான்.

ஸ்நான ஸங்கல்பமாவது: "த்ரிராத்ரம் ஜாஹ்நவீதீரே பஞ்சாராத்ரந்து யமுனே, ஸ்த்யபு: நாதி காவேரி பாப மா மரணுந்திகம்" இதன் பொருள். மூன்று நாள் கங்கையில் ஸ்நானம் செய்தும், யமுனையில் ஐந்து நாள் ஸ்நானம் செய்தும் பெறக் கூடிய பலன்களை காவேரியில் ஒரே ஸ்நானத்தில் பெற்றுவிடலாம் என மேலே கூறப்பட்டுள்ள ஸ்நான சங்கல்பத்தில் விளக்கப்பட்டுள்ளது.

புண்ணியம் செய்ய விரும்புகிறவர்கள் செய்யும் புண்ணியங்களில் மிகவும் உயர்ந்தது காவேரி ஸ்நானமே ஆகும். துலாக் காவேரிக்கு இணையான புண்ணியத்தைச் செய்விக்க இந்தப் பூமியிலும் அந்தச் சொர்க்கத்திலும் எவையும் இல்லை. எவரானாலும் துலாக் காவேரி ஸ்நானத்தில் காரணமாகப் புண்ணியத்தை அடைவார்கள். துலாக் காவேரி ஸ்நானமானது பந்தங்களை எல்லாம் ஒழித்து சுகம் தரும்.

உப பாதகர்களும் துலாக் காவேரி ஸ்நானம் செய்தால் வைகுந்த பதவி அடைவார்கள். துலாக் காவேரி ஸ்நானமானது புத்திர பாக்கியம் வேண்டுவோர்க்குப் புத்திர பாக்கியத்தைக் கொடுக்கும். ஏழைகளுக்கு தரித்திரத்தை நீக்கி, பாவத்தை ஒழித்துச் செல்வம் தரும். கன்னிப் பெண்களுக்கு விவாகம் நடைபெறும். மேலும் துலாக் காவேரி ஸ்நானம் செய்து நல்ல வஸ்த்ரம், பழம், புஷ்பம், சந்தனம், தானியம், பொன் இவைகளைத் தானம் செய்தவனுக்கு மஹா லக்ஷ்மி கடாக்ஷம் உண்டாகி எல்லா போகங்களையும் இவ்வுலகத்தில் அனுபவித்து, மறுமையில் வைகுந்த பதவியைப் பெறுவான்.

பதினான்கு லோகங்களிலும், இக்காவேரிக்கு இணையான தீர்த்தம் ஏதும் இல்லை. இதன பெருமையைக் கேட்டு இதனுள் மூழ்கி ஸ்நானம் செய்பவன், ஐஸ்வரியங்களை உடையவன் ஆவான். பதினான்காயிரம் காத தூரத்திற்கப்பால் இருந்து கொண்டு "காவேரியை நம:" என்று கூறினாலும் கூட, இதனுள் மூழ்கியவன் அடையும் பலனை, கூறியவர்கள் அடைவார்கள் என்பது சான்றோர்கள் வாககு.

வேதங்களை மாசற ஓதுபவனும், மரவுரி தரித்து வாழ்வைத் துறந்தவனும், தவம் செய்பவனும், தானம், தருமம் செய்பவனும், காவேரி நதியில் துலா மாதம் முழுவதும் ஸ்நானம் செய்பவனுமே மேன்மையானவன் ஆகிறான். மானிடப் பிறப்பெடுத்த ஒவ்வொருவனும் துலா மாதத்தில் கௌரி மாயூரமென்னும் தலத்தினை அடைந்து ஸ்நானம் செய்ய வேண்டும். அங்ஙனம் செய்பவன் மானிடரில் உயர்ந்தவன் ஆகின்றான்.

மயிலாடுதுறையில் சப்த ரிஷிகள் ஏழு இடங்களில் ஏழு விஸ்வநாதரை பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தார்கள்.

பஞ்சரங்க க்ஷேத்திரங்களாகிய வைஷ்ணவ ஸ்தலங்கள் காவேரியின் கரையில் உள்ளது.

1. ஸ்ரீரங்கப்பட்டிணம்
2. ஸ்ரீரங்கம்
3. கோயிலடி
4. கும்பகோணம்
5. திருஇந்தளூர் (திருவிழந்தூர்-மயிலாடுதுறை)

திருஇந்தளூர் பரிமள ஸ்ரீரங்கநாதரும் துலாக் காவேரியில் ஐப்பசி மாதம் முழுவதும் தினசரி காவேரியில் வநது தீர்த்தம் கொடுத்து அருள் பாலிக்கிறார்கள.

துலா ஸ்நானம் 30 நாளும் செய்ய முடியாவிட்டால் 30வது நாள் கடைமுகத்தன்று செய்தால் அது 30 நாளில உள்ள பலனைக் கொடுக்கும்.



# திருக்கார்த்திகை தீபம்

"சன்மிஷ்டை"

திருக்கார்த்திகை பண்டிகையில் "வைகானச தீபம்" எனவும், "பாஞ்சராத்ர தீபம்" எனவும் இரு பிரிவுகள் உள்ளன. சைவர்கள் வைகானஸ ஆகமத்தை அனுசரித்தும், ஸ்ரீவைஷ்ணவர்கள் பாஞ்சராத்ர ஆகமத்திற்கிணங்கவும் ஆலயங்களிலும், இல்லங்களிலும்கூட இப்பண்டிகையைக் கொண்டாடி வருகின்றனர்.

இப்பண்டிகை மிகப்பழமையானது எனபதறகுத் தமிழ்ச் சங்ககாலப் பாடல் ஒன்றே போதுமான சான்றாகும். இதோ, அப்பாடலைக் காண்போம்.

"குடத்து விளக்கே போற் கொம்
பன்னார் காமம்
)ப்பட்டா பூந்தார் வழுதி-
புறப்படின்
ஆபுகு மாலை அணிமலையில்
தீயே போல்
நாடறிகௌவை தரும்"
-முத்தொள்ளாயிரம்

இப்பணடிகை சம்பநதமாக ஒரு முதுமொழியும் உண்டு. அதையும் இங்கு நினைவுபடுத்துவோம்.

"கனறி முதிர்ந்த கழியப்பன் னாள்
செயினும்
ஒன்றும் சிறியார்கள் என்றுனும்
தோன்றாம்
ஒன்றுய் விடினும் உயர்ந்தார்ப்
படுங்குற்றம்
குன்றின்மேல் இட்டவிளக்கு"
-பழமொழி நானூறு

ஆகா! என்ன அருமையான பாடல். தெய்வத்தமிழ் மொழியிலே இப்பண்டிகைக்கு உவமையாக அமிர்தமும். தேனுமளாவிய சுவையினுஞ் சுவை. விஞ்சும்படி இப்பாடல் அமைந்துள்ளதைச் சிந்திப்போமாகில், தமிழ்மொழி தனக்கென பல தனிப்பெருஞ் சிறப்பியல்புகளைக் கொண்டது என்று புலப்படுகிறதல்லவா?

## பண்டிகை முறை

கார்த்திகை மாதம் பௌர்ணமி நன்னாளில் ஒவ்வொரு இல்லததரசியும் தங்கள், தங்கள் இல்லங்களை காலையில் பசும் கோமயத்தால் மெழுகிச் பச்சரிசி மா கோலமிட்டு, மாவிலை தோரணம் தொங்கவிட்டுச் சிறு வாழை கட்டி அலங்கரிப்பார்கள். சிலர் அப்யங்க ஸ்னானம் (நல்லெண்ணை தேய்த்துக் குளித்தல்) செய்வதுண்டு.

அன்று மாலையில் சூர்யன் மறைவதற்குச் சிறிது முன்பாக புத்தாடை உடுத்தி, கோலமிட்



தீபசுந்தரி - ஆந்திரமாநில கைவினைத்திறன். புகைப்படம்: கே. சுந்தரம்.

டமனையில் யானை விளக்கு களை - அகல் விளக்குகளை வரிசை வரிசையாக ஏற்றி வைத்து, நடுவில் வாழைப்பூ குத்து விளக்கை ஏற்றி வைத்து, வாச மலரிட்டுத் தூபதீப உப சாரங்களைச் செய்து அப் பம், இனிப்புக் கலந்த அவல் பொரி, நெல்பொரி, வேர்க்க டலை, பொட்டுக்கடலை, தேங் காய், வாழைப்பழம் முதலிய வைகளை தீபத்திற்கு நிவே தித்து, "தீப மங்கள ஜோதி நமோ நம!" என்று போற்றி, கற் பூர ஹாரத்தியும் காண்பித்து, இசைபாடி, அத்தீபங்களை வீட் டைச்சுற்றிலும் வைத்து பிரகா சிக்கச் செய்து, இறைவன் வீடு முழுவதும் ஒளிமயமாய்த் திகழ் வதைக்கண்டு களிப்புறுவார்கள்.

அக்கம் பக்கத்துத் தாய் மார்களையும் குழந்தைகளையும் தாம்பூலத்திற்கு அழைப்பித்து, அவர்களுக்குத் தாம்பூலம், மஞ் சள் குங்குமம் முதலியவைகளை வழங்குவார்கள். சிறு பிள் ளைகள் மத்தாப்பு, பட்டாசு வெடிகளைக் கொளுத்தி ஆர வாரம் செய்வார்கள். மேலும், ஒளி வீசும் தீபம் வைக்கப்பட்ட வண்ண வண்ணக் கூண்டுகளை வாசலில் தொங்கவிடப்பட்டு வீட்டை மிக்க அழகுபட விளங் கச் செய்வதுமுண்டு.

கார்த்திகை தீபம் திருநாளுக்கு முந்திய நாள் "பரணி தீபம்" என்றும், பிந்திய நாள் "குப் பைக் கார்த்திகை" என்றும் ஆக மூன்று நாட்கள் இந்தத் தீபத்திருவிழா கொண்டாடப்படு கிறது. தவிர இம்மாதம் முழுவ தும் தமிழகமெங்கும் கதிரவன் மறைந்த பின்னர் இல்லங்க ளின் தலைவாசலில் தீபங்களை ஏற்றி வைக்கும் நேர்த்தியான காட்சியை இன்றும் நாம் பார்க் கக் கூடும்.

தஞ்சை மாவட்ட காவிரி தீரவாசிகள் சூரியன் நன்கு மறைந்த பின்னர் இம்மாதத் தில் மந்தாரை இலையினால் செய்யப்பட்ட சிறிய ஓடத்தில் தீபம் ஏற்றி வைத்து, வடநாட் டினர் ஹரித்வாரத்தில் கங்கை யில் ஜோதி வழிபாடு செய் வதை ஒக்க - காவிரியில் சமர்ப் பிக்கின்றனர். அத்தீப ஓடங்கள் ஒளி வீசிக்கொண்டு ஓடும் நதி யில் மிதந்து போகும் அற்புத மான காட்சியைக் கண்ணுற்று மகிழ்ச்சியடைகிறார்கள்.

இம்மாதத்தில் ஒவ்வொரு சோம வார்த்தன்று, தமிழக புராதன சிவாலயங்கள் யாவற் றிலும் அந்திப் பொழுதில் அது வும் மகா பிரதோஷ காலத் தில் "நூற்றியெட்டு" சங்காபி ஷேகம் இறைவனுக்குச் செய்யப் பட்டு வருவது கண்கூடு.

## ஸ்ரீதர அய்யாவாள் சிறப்பு

கார்த்திகைத் திங்களில் பௌர்ணமியன்று திருக்கார்த்தி கைப் பண்டிகை கொண் டாடுவதைப் போல், அமாவா சையன்றும் தஞ்சை மாவட் டத்தில் திருவிசைநல்லூரில் ஸ்ரீதர அய்யாவாள் "கங்கா கர் ஷண உற்சவம்" கொண்டாடப் படுவது இங்குக் குறிப்பிடத்தக் கது. அன்னாரின் வரலாற்றைச் சிறிது விவரிப்போம்

தஞ்சை போஜன என்று புக ழப்படும் சாஹாஜி மகாராஜன் காலத்தில் (கி.பி. 1684-1710) திருவிசைநல்லூரில் ஸ்ரீவெங்க டேசர் என்ற நிகமாகம கோசர குண சம்பன்னர் ஒருவர் இருந் தார். இவரே பின்னொரு காலத் தில் ஸ்ரீஅய்யாவாள் என்று புக ழப்பெற்றவர். ஒரு சிறந்த சிவனடியார்.

இக்கலியுகத்தில் பகவன் நாம சங்கீர்த்தனமே ஆன்ம ஞானம் அடைய சிறந்த எளிய மார்க் கம் என்ற சித்தாந்தத்தை பிர காசிக்கச் செய்தவர். திருவி டைமருதூரில் எழுந்தருளியுள்ள மஹாலிங்க ஸ்வாமியை ஒவ் வொரு மஹாபிரதோஷ காலத் தில், காவிரியைக் கடந்து சென்று தரிசிக்கும் பேறு பெற் றவர். ஒரு நாள் திடீரென்று காவிரியில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டதால் அன்னாருக்கு சிவ தரிசனம் தடைப்பட்டது.

கரையில் மனம் கலக்கமுற்ற வராய் இருந்த சமயம், இறை வன் ஓடக்காரனாய் தோன்றி, தோணியில் ஏற்றி அக்கரை யில் சேர்த்து சிவதரிசனத்திற்கு உதவி புரிந்ததாக சான்றுகள் உள்ளன. கார்த்திகை அமா வாசையன்று பிதரு கார்யமா கச் சமைக்கப்பட்ட அன்னத் தைப் பசியால் வாடின ஒரு வனுக்கு வழங்கின காரணத் தால், அவ்வூர் கிராமவாசி கள் அதற்குப் பிராயச்சித்தமாக கங்காஸ்நானம் செய்யவேண்டு மென்று கூறவே, தன் இல்லத் திலுள்ள கிணற்றில் அனைவர் எதிரில் கங்கையை ஆவிர்பவிக் கச்செய்து, பொங்கி வழிந்து ஓடுமாறு செயற்கரிய செய்கை யைச் செய்வித்த சித்த புரு ஷர். அந்தக் கிணற்றில் அந்த நன்னாளில் இன்றும் நீராடி

அன்னாருக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் பத்து நாட்கள் உற்சவம் நடத்தப்படுகிறது. உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை! இதனை இன்றும் கண்கூடாகச் சென்று பார்க்கலாம்.

### ஆலயங்களில்

ஆலயங்களிலும், நூற்றுக்கணக்கான தீபங்கள் ஏற்றி, உற்சவ மூர்த்தியை மேன்மையாய் அலங்கரித்து உட்பிரகாரத்தில், மாலை வேளையில் பவனி வரச் செய்து, கோவிலின் வெளிவாசலில் சூரியன் மறைந்த பின்னர், "சொக்கப்பானை" என்று சொல்லப்படும் பேரொளிச் சுடரும் கொளுத்துவார்கள். சிறுவர்கள் குங்கிலியம் வாங்கி சிறிய தீப்பந்தம் கொளுத்தி அதில் போட்டு மகிழ்வார்கள். இது தொன்று தொட்டுத் தமிழகத்தில் நடந்துவரும் நிகழ்ச்சியாகும்.

மலைகள் உள்ள க்ஷேத்திரங்களில், அம்மலைக் குன்றின் மேல் அகண்ட தீபம் ஏற்றுவார்கள். அந்த க்ஷேத்திரவாசிகள் அந்நாளிலேயே பண்டிகையைக் கொண்டாடுவார்கள். குன்றில் மேலிட்ட சுடரைத் தரிசிப்பவர்கள் முக்தியடையப் பெறுவதாக ஐதீகம். சிலர் இப்பண்டிகையை பௌர்ணமியன்றும், சிலர் திருக்கார்த்திகையன்றும் கொண்டாடுவதாகத் தெரியவருகிறது.

### அருணாசலம்

கார்த்திகை தீபம் என்று கேட்ட மாத்திரத்திலே நமக்குத் திருவண்ணாமலைப் பற்றியே ஞாபகம் வருகிறது. இந்த க்ஷேத்திரத்திற்கு "அருணாசலம், சோணாசலம்" என்ற சிறப்புப் பெயர்களும் உண்டு. இது பஞ்ச பூத திருத்தலங்களில் ஒன்றான "தேயு" (அக்னி) ஸ்தலமாகும். மேலும், பூமியின் இருதய ஸ்தானமுமாகும்.

காசியில் இறத்தலும், அளவில்லாப்பெருமையுடைய திருவண்ணாமலையை நினைத்தலும், தில்லையைத் தரிசித்தலும், சிறப்புற்ற திருவாரூரில் பிறத்தலும் வீடு பேறுக்கு ஏதுவாகுமென்று அறநூல்கள் எடுத்து இயம்புகின்றன.

## சந்தாதாரர்களுக்கு...

31-12-91-ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும், விவரங்களுக்கும் 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

28, 31, 32, 37, 38, 57, 118, 126, 132, 140, 142, 145, 150, 154, 255, 261, 268, 439, 440, 442, 443, 445, 452, 455, 466, 467, 469, 475, 478, 588, 593, 597, 850, 874, 877, ,888, 915, 918, 924, 926, 933 939, 948, 951, 958, 959, 1572, 1848, 2031, 2102, 2237, 2238, 2295, 2299, 2303, 2307, 2310, 2318, 2326, 2329, 2357, 2368, 3272, 3340, 3656, 3658, 4038, 4089, 4601, 4949, 4964, 4965, 4967, 4969, 4984, 4993, 5006, 5018, 5023, 5024, 5025, 5029 முதல் 5033, 5036, 5037, 5042, 5043, 5045, 5047, 5050, 5056, 5058, 5060, 5066, 5071, 5073, 5078, 5490, 5603, 5606, 5752, 6462, 6469, 6470, 6477 முதல் 6481, 6483, 6485 முதல் 6487, 6489 முதல் 6491, 6494, 6508, 6509, 6512, 6514, 6515, 6519, 6531, 6533, 6535, 6536, 6538, 6550, 6551, 6552, 6561, 6562, 6565, 6568, 6569, 6577, 6583, 6588, 6591, 6594, 6598, 6606, 6611, 6613, 6618, 6619, 6620, 6625, 6626, 6627, 6629, 6632, 6634, 6635, 6642, 6648, 6650, 6653, 6654, 6656, 6659, 6662, 6665, 6667, 6670, 6671, 6674, 6683, 6687, 6689, 6692, 6693, 6696, 6698, 6700, 6701, 6705, 6707, 6710, 6713, 6714, 6715, 6725, 6727, 6729, 6741, 6744, 6747, 6748, 6753, 6754, 6759, 6761, 6765, 6766, 6767, 6769, 6771-A, 6775, 6776, 6781 முதல் 6783, 6787, 6792, 6793, 6794, 6796, 6803, 6809, 6812, 6813, 6814, 6832, 6834, 6837, 6838, 6855, 6860, 6867, 6871, 9544 முதல் 9555, 9557 முதல் 9558, 9560.

## அருணபூதரம்

அங்குள்ள மலை இன்று நேற்று வந்ததன்று; விரிந்த பூமியும், வானுலகமும் பரந்த வானவெளியும் என்று தோன்றினவோ அன்றே இத்திருத்தலத்திலுள்ள மலையானது உண்டானது. துயரத்தையும் ஆசையையும் நீக்கிடும் இறைவன் ஒப்பற்ற பெரிய ஜோதி வடிவாய் வானளாவி வளர்ந்ததும், யாவருக்கும் போகத்தை நல்கும் திருமலையாக அருணபூதரமாய் இக்கோயில் விளங்கி வருவதாகப் இதிகாஸ புராணங்கள் கூறும். அசையும் பொருள், அசையாப் பொருள்கள் எல்லாவற்றையும் முக்தியிலே சேர்ப்பிக்கும் சிறப்பு வாய்ந்தது - இத்திருத்தலம். இம்மலையைச் சுற்றிலும் பல அருட்பெருஞ்சான்றோர்களும், சித்தர்களும் வாழ்ந்து வருவதாகக் கூறப்படுகிறது.

## யுகபேதம்

இந்த மலை யுகத்திற்கு யுகம் மாறுபட்டு வருவதாக ஸ்காந்த புராணம் வர்ணித்துள்ளது. முதல் யுகமாகிய கிருதயுகத்தில் நெருப்பு மலையாகவும், திரேதாயுகத்தில் மாணிக்க மலையாகவும், துவாபர யுகத்தில் மிகுந்த ஒளிவீசும் பொன்மலையாகவும், கலியுகத்தில் கல் மலையாகவும திருவுருக்கொண்டு "அருணசலம்" என்று திருப்பெயர் பெற்றது என்பர்.

## பாடல் பெற்ற ஸ்தலம்

இந்த திவ்ய ஸ்தலத்தை சைவசமய நாயன்மார்களில் முதன்மையான திருஞான சம்பந்தப்பெருமாள், "அண்ணமலை, தொழுவார் வினை வழுவா வண்ணம் அறுமே" என்றும், அப்பர் அடிகளும் "ஆதியே! அமரர் கோவே! அணி அண்ணமலையுளானே" என்றும், "அண்ணமலையானைப் பாடுதுங்காண் அம்மானாய்" என்று மாணிக்கவாசகப் பெருந்தகையும் பாடிப்பணிந்துள்ளார்கள். அண்ணமலை அத்துணைப் பெருஞ்சிறப்புடையது. அங்குநடைபெறும் கார்த்திகைப் பேரொளி கண்ணையும் கருத்தையும் கவருவது; எண்ணற்ற மக்களை ஈர்ப்பது.

திருவண்ணமலையிலே பிறந்தும் வளர்ந்தும் இருவினையொப்பு மலபரிபாகம், சக்திபாதம் எய்தி, ஞானம கைவரப்பெற்று, முருகப்பெருமானின் பேரருளைப்பெற்ற அருணகிரிநாதர், இங்குள்ள பரஞ்சோதியான இறைவனை, "ஞாலா மேலா வேதா போதா நாதா சோதிக் கிரியோனே" என்று வாடாத வடமொழியிலும் தெவிட்டாத தென்மொழியிலும் கலந்து உருக்கமாகப் பாடியுள்ளார்.

நிகழும் இருபதாம் நூற்றுண்டிலே மிகச்சிறந்த பற்றற்ற தூய துறவியாய், அணணமலையாரை அடைக்கலம் அடைந்தவராய், நெடிய தவத்தின் பெருமையால் உயர்வு பெற்றவராய், ஆன்ம ஞானியாய், பேசாமௌனியாய், அத்வைதச் செம்மலாய், அருணசல சிவமாய், ஜீவன் முக்தராய்த் நம்மிடையே வாழ்ந்து உலகப் புகழ் பெற்ற ஸ்ரீரமண மகரிஷிகள் அருளிய அண்ணமலை தீப தரிசன தத்துவப் பாடலொன்றை இங்குக் காண்போம்.



கூடலழகர் கோயில் கோபுரம் - மதுரை.

"இத்தனுவே நானா மெனு மதியை நீத்தப்
புத்தியித யத்தே பொருந்தி யக நோக்கா
லத்துவித மாமெய் யகர் சுடர்காண் கையூ
மத்தியெனு மன்னா மலைச்சுடர் காண் மெய்யே!"

ஆகவே, திருக்கார்த்திகைப் பண்டிகைக்கும், அருணசலதகிற்கும் பெருந்தொடர்புண்டு எனறு தெரிகின்றதல்லவா!

இத்திவ்ய ஸ்தலம் சங்க காலத்திற்கு முன்பிருந்தே குன்றின் மேலிட்ட விளக்கினாலும், கார்த்திகை விளக்கினாலும் பாரதம் எஙகணும் புகழ் பெற்றதாக விளங்கி வருகிறது!

***

(17-ஆம் பக்கத்தொடர்ச்சி)

விடைகள்:-

1. பத்ரிகாசிரமத்தில் பண்டைக்காலத்தில் தவம் புரிந்து வந்த ரிஷிகள்.

2. பீஷ்மர் வாழ்க்கையிலிருந்து.

3. மாயப்பிரபஞ்சத்திற்கு ஆதாரம் பிரம்மம். மாயப்பிரபஞ்சம் கால, தேச, நிமித்த மய மானது. பிரம்மமோ கால தேச; நிமித் தத்துக்கு அப்பாற்பட்டது. பிரம்மத்தை அறிகிறவன் அனைத்தையும் அறிந்தவ னாகிறான் என்பதே யுதிஷ்டிரனின் பதில்.

4. பண்பட்டவன் என்பது பொருள்.

5. மனம்.

6. யார் பக்கமும் சேரப்பிடிக்காமல் தீர்த்த யாத்திரை சென்று விட்டான்.

7. உள்ளச் சோர்வு.

8. போர் துவங்கும் வேளையில் யுதிஷ்டி ரன் தன் ஆசாரியரான துரோணரை வணங்கிய பொழுது அவர் "நீ வெற்றி பெறுவாய்" என ஆசீர்வதித்தார். அப் பொழுது யுதிஷ்டிரன் 'தங்களை யாரா லும் வெல்ல இயலாது. அப்படியிருக்க நாங்கள் எவ்வாறு இந்தப் போரில் வெற் றிபெறுவோம்?' எனக்கேட்க, துரோணர் தன்னை வெல்லும் வழியைத் தானே அவனுக்குக் கூறினார்.

9. அர்ச்சுனனைத் தவிர மற்ற பாண்டவர் களை ஒரே ஒரு நாளைக்கு மட்டும் போரில் சமாளிக்கும் வரத்தைச் சிவ னார் ஜயத்ரதனுக்கு அருளினார்.

10. துரோணர் சேனாதிபதியான பிறகு ஒரு நாள் துரியோதனன் அவரை "நீங் கள் பாண்டவர்களுக்கு உதவி செய்து வருகிறீர்கள். சிந்து மன்னன் ஜயத்ரத னைக் காப்பதற்குப் பதிலாக அவனுடன் போர் புரிய அர்ச்சுனனை விட்டுவிட்டீர். உம்மை நம்பி மோசம் போனோம்" என்று இகழ்ந்து பேசினான். அப்பொ ழுது அவர் "இந்த மந்திரசக்தி வாய்ந்த அங்கியை அணிந்து கொள்; ஆயுதம் எதுவும் இதைத்துளைக்காது. இதை அணிந்து கொண்டு நீ அரச்சுனனுடன் போர் செய். நான் யுதிஷ்டிரனைச் சிறை பிடிக்க அப்பொழுது மிகவும் சுலபம்" என்று துரியோதனுக்குக் கூற துரியோ தனும் அர்ச்சுனனும் போர்க்களத்தில் சந்திக்கின்றனர், முதன்முறையாக.

11. வியாச மகரிஷி சஞ்சயனுக்கு அனுக்கிர கம் செய்த ஞானக்கண் உதவியால் அவ் வப்பொழுது குருட்டு மன்னன் போர் விவரங்களைச் சஞ்சயன் மூலம் அறிந் தான்.

12. பாரதப்போர் முடிந்ததும் காந்தாரி கிருஷ்ணனுக்குக் கொடுத்த சாபம் அது. கிருஷ்ணன் மட்டும் மனம் வைத்திருந் தால் ஆரம்பத்திலேயே போரைத்தடுத்தி ருக்க முடியும் என்பது அவள் எண்ணம். குரு வம்சம் அழிந்தது போல் விருஷ்ணி வம்சம் அழியட்டும். எனச்சாபமிட்டாள் அவள்.

13. கடோத்கஜன்.

14. ஜயத்ரதன். பத்ம வியூகத்திற்குள் நுழைந்த அபிமன்யுவைப் பின்பற்றி மற்ற பாண்டவ வீரர்கள் நுழைய விடாமல் தடுத்தவன் அவன்.

15. பீஷ்மரின் கூற்று. அம்புப் படுக்கையில் உயிர்விடத்தயாராக இருந்த அவரை அணுகி கிருஷ்ணன் தகுதி வாய்ந்த யுதிஷ்டிரனுக்கு ஞானக்கொடை (அறிவு) தாங்கள் வழங்க வேண்டும் எனக் கேட்ட பொழுது யுதிஷ்டிரனுக்குப் பீஷ்மர் வழங் கிய அறிவுரைகளில் ஒன்று அன்பு பற்றியது.

16. ஞானிகள் எனப்படுவோர் கல்வியடக்கமு டைய பிராம்மணனிடத்தும், பசுவினிடத் தும், யானையினிடத்தும், நாயினிடத் தும், நாயைத்தின்னும் கீழோனிடத்தும் சமநோக்குடையவர்.

17. மனிதன் பொருள்களைப் பற்றி நினைப்பதால் பற்றுண்டாகிறது. பற்று ஆசையாக வடிவெடுக்கிறது; ஆசை பின்னர் சினமாக மாறுகிறது; சினத்தால் மனக் குழப்பம்; குழப்பத்தால் நினைவின்மை; நினைவு நாசத்தால் புத்தி நாசம்; புத்தி நாசத்தால் முடிவில் மனிதன் அழிகிறான்.

18. தவம் என்பது முழுமையான புலனடக்கம். உள்ளத்தின் உள்ளே மறைந்திருக்கும் பேராற்றலை வியாபகப்படுத்துதற்கு தவம் ஒன்றே சிறந்த வழி. 'தத்' என்ற சொல் பிரம்மத்தைக் குறிக்கும் சொல். உண்மை, நன்மை என்ற கருத்தில் வழங்கப்பெறும் சொல் 'ஸத்' ஆகும். மங்கள கர்மங்களிலும் ஸத் என்ற சொல் வழங்கப்படுகிறது.

---

# ஏகாதசி விரதம்

## --ஓர் அறிவியல் பார்வை

ஏகாதசி என்பது ஓர் உத்தம புண்ணிய காலம். அன்று உண்ணாவிரதம் இருந்து ஸ்ரீமந் நாராயணனை வழிபடல் மிகச்சிறந்த தவம் என்ற நம்பிக்கை நம் பாரத தேசத்தில் பல நூற்றாண்டுகளாக நிலவி வந்துள்ளது.

சில ஆண்டுகளுக்கு முன் ரஷ்ய நாட்டு விஞ்ஞானிகள் ஏகாதசி உபவாஸத்தினால் மனச்சிதைவு நோய் (Schizophrenia) கூட தீரும் என்று கண்டறிந்துள்ளனர். டாக்டர் நிகோலயிவ் (Dr. Nicolayev) மாஸ்கோ மனவியல் நிறுவனத்தில் (Moscow Institute of Psychiatry) 27 ஆண்டு காலம் 8000 மன்நலமற்ற நோயாளிகளுக்கு உண்ணாவிரதம் (தண்ணீர் மட்டும் பருக அனுமதித்து) மேற்கொள்ள செய்து இவ்வுண்மையை கண்டறிந்துள்ளார்.

உடலில் நச்சுப்பொருட்கள் சிறிது சிறிதாக சேர்ந்து முடிவில் மனநோய்களைத் தோற்றுவிக்கின்றன. இந்நச்சுப்பொருட்களை (Toxins) உடலிலிருந்து வெளியேற்ற உண்ணாவிரதம் எளிய வழி என்பதே டாக்டர் நிகோலயிவின் அடிப்படை கண்டுபிடிப்பு.

மேலும உண்ணாநோன்பினால் மன பிரமைகள் (Hallucinations) மறைகின்றன. சிடுசிடுப்பு போன்ற உணர்ச்சிப் பெருக்குகள் அமைதியாகின்றன. மனித நேயமும் சுமுக உறவும் மற்றவர்களிடம் ஏற்படுகின்றன. நாவில் தோன்றும் மாவும் (tongue acidosis) மறைகிறது. பசி பெருகி, கனவில் கூட உண்பது போன்ற கனவுகள் தோன்றுகின்றன. உடலில் எடை மட்டுமே சற்று குறைவுபடுகிறது என்று கண்டுபிடித்துள்ளனர்.

தகவல் : ஏ. சுந்தரராஜன்
சென்னை-600005.

ஆதாரம : The Energies of Consciousness P. 4
(Interface 1971, USA)

# தவம்

— திரு. க. இராமலிங்கம் - புதுப்பேட்டை.

தவம் என்பது காட்டிற்குச் சென்று ஜடாமுடியுடன், ஊன் உறக்கமின்றி இறைவனை நினைந்து, இறைநிலை அடைதல் என்று நினைக்கிறோம்.

தமக்கு நேர்ந்த துன்பத்தைத் தாங்கிக்கொள்ளுதலும், மற்ற எவ்வுயிருக்கும் துன்பம் செய்யாதிருத்தலே தவம் என்கிறார் திருவள்ளுவர். இந்நோன்பைக் கைக்கொள்வது எளிதல்ல என்றும் கூறிவிடமுடியாது.

மற்றவர்களுக்குத் துன்பம் தரவில்லையென்றால் நமக்கு யாரும் துன்பம் தரப்போவதில்லை. அப்படியே நமக்கு யாராவது துன்பம் செய்தாலும், அதை நாம் தாங்கிக்கொள்வதால், அவருக்கு அது சலித்துப் போய் நமக்குத் துன்பம் கொடுப்பதை நிறுத்திக்கொள்வதோடு மற்றவர்களுக்கும் துன்பம் இழைக்கமாட்டார். அதனால் பகைமை எண்ணம் அழிந்துபட்டுப் போகிறது. யாவரும் நண்பர்களாக - சகோதரர்களாகி விடுகிறோம். அந்த வலிமை பெறச் செய்வதுதான் தவம். அதனால் அறிவு ஒளிரும்.

'தவ' என்றால் வடமொழியில் 'வணக்கம் செலுத்துதல்' என்று பொருள்; தவம் செய்பவர்கள், மற்றவர்கள் வணங்கும்படியான தன்மை உடையவர்களாக இருக்க வேண்டும் என்பது பெறப்படும்.

புடம்போட்ட தங்கமாக அறிவு ஒளிபெறுவதால் தவம் செய்வோரை அனைவரும் வணங்குவர் - நம் உயிரைக் கொண்டுபோகும் எமன் உள்பட.

வேதகால மகரிஷிகள் தவத்தை எப்படிக் கையாண்டார்கள் என்று பார்ப்போம்.

சரீரத்தால் சாதிக்கக்கூடிய தவம் (காயிசம்)

உடலைக் கருவியாகக்கொண்டு செய்யப்படுவது. பெரியோர்களிடம் மரியாதையுடன் நடந்து கொள்ளுதல், சரீரத்திற்குத் தூய்மையளிக்கக் கூடியவகையில் புண்ய தீரத்தங்களில் நீராடல், நேர்மையுடனிருத்தல், பிரம்மச்சர்யம், அஹிம்சை இவைகளை அனுஷ்டித்தல் ஆகியவை தான் சரீரத்தினால் சாதிக்கக்கூடிய தவமாகும்.

பெரியோர்களிடம் மரியாதையாக நடந்து கொள்வதே தவம் என்றால், அந்தத் தவத்தை நாம் செய்யத்தானே வேண்டும்.

வாக்கினால் செய்யக்கூடிய தவம் (வாகிசம்)

பிறர்க்கு வெறுப்பையும் அச்சத்தையும் உண்டாக்காததும், உண்மையானதும் - இதமானதுமான சொற்களைச் சொல்லுவது, வேதம், இறைவன், நாமங்களை மனனம் செய்தல் ஆகியவை பேச்சினால் செய்யக்கூடிய தவமாகும்.

மனத்தால் செய்யப்படுவது - (மானசீகம்)

காமம், கோபம் இவைகளுக்கு மனதில் இடமளிக்காதிருப்பது, பிறர் விஷயத்தில் நன்மையே நினைப்பது, மௌனவிரதம் அனுஷ்டித்து மனத்தை அடக்குதல் - கபடமான எண்ணத்தை ஒழித்தல் ஆகியவை மானஸமான தவமாகும்.

இவை யாவற்றையுமே வாழ்க்கையில் கடைபிடிக்க முடியும். அந்தத் தவத்தைச்செய்ய

எல்லோருமே விரும்பவேண்டும். அதைக் கடைப்பிடிக்கும் எண்ணத்தில்தான் முன்னோர்கள் வாழ்க்கையை நான்கு நிலைகளாகப் பிரித்திருக்கின்றனர். அவை பிரம்மசர்யம், கார்ஹஸ்த்யம், வானப்ரஸ்தம், ஸந்நியாஸம் என்பன.

அதில் கிருஹஸ்தர்கள் மட்டுமே மற்ற மூன்று நிலைகளில் உள்ளவர்களுக்கு உணவளித்து உபசரிக்க முடிகிறது. எனவே கிருஹஸ்தம் எல்லோருக்கும் உதவுகின்ற ஆச்ரமமாகிறது.

யோகி ஒருவர் சித்தி பெறவேண்டுமாயின் முதலில் புலன்களை அடக்குகிறுர். ஆசைக்கு விஷயமான பொருள்களின் உண்மைநிலையை அறிந்து, அவ்வறிவினால் பொருள்களை அனுபவிப்பதாலே வரும் குற்றங்களைக் கண்டு, அதன் மூலம் இந்திரியங்களை அடக்குவது எளிது. உண்மையறிவினால் புலனடக்கம் ஏற்படுமாயின் அது ஸ்திரமாக இருக்கும். பலாத்காரமாகப் புலனை யடக்கியிருந்தால் எந்த நொடியிலும் புலன்கள் அடங்காது போகலாம் - அது நிலையானதும் அல்ல.

நாம் கிருஹஸ்தர்களாக இருந்து கொண்டே தவம் செய்ய இயலும். காந்தியின் புலனடக்கம் (கண், மெய், வாய், மூக்கு, செவி என அறிவுக்கான ஞானேந்திரியங்களாயும் கை, கால், கர்மேந்திரியங்களையும் அடக்குவது தான் புலனடக்கம்) தான் அதற்கு ஒரு வழிகாட்டியாக அமையும், நமக்கு நேரும் துன்பத்தைத் தாங்குதல் - பிறர்க்குத் துன்பம் இழைக்க நினையாதிருத்தல் - நல்ல வார்த்தைகளைச் சொல்லுதல், இறைவன் புகழை ஓதுதல் - போகம் தவிர்த்தல் - வாரம் ஒரு நாளாவது மௌனவிரதம் இருத்தல் - இதுதான் மனத்தை அடக்கும் பூட்டின் திறவுகோல். கிருஹஸ்தத்தில் இன்றே தவம் செய்ய முயல்வோம்.

“உறுதியாக - உள்ளம் நடுங்காது, சக மார்க்கத்திலும் சன்மார்க்கத்திலும் நிற்போம். பொறிகளின் வழியே புலன்களைச் செலுத்தாமல் இருத்தலே தவம். சிவனை நினைத்தாலே தவம் கைகூடும்' என்கிறுர் திருமூலர்.

சிவனருள் இருந்தால் ஞானம் மிகும் - வினை நம்மைப் பற்றுது.

பிறர்க்குப் பயன்படாது செல்வத்துடன் வாழ்வதைக் காட்டிலும் பிறர்க்குப் பயன்பட்டு ஏழ்மையடைவது சிறந்ததாகும். அதுவே சிறந்த தவமாகும். *



**1-10-91** அன்று திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்ய கலாமந்திரத்தில் ஸ்ரீமான் உ.வே. பி.டி.ஜி.வி.எல். நரசிம்மாசார்யுலு அவர்களின் 'பகவத் விஷயம்' பற்றிய தொடர் சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. இறுதி நாளன்று பக்திரஸ மஞ்சரி குழுவினரால் 'ஆண்டாள் வைபவம்' எனும் நாட்டிய நிகழ்ச்சி நடைபெற்றது.

# தீபாவளி தத்துவம்

கவிஞர் சோமசுந்தரப்பெருமாள் - தங்கவயல்

தீபாவளி நம் பாரத நாட்டில் எல்லாராலும் போற்றிக் கொண்டாடப்படுகின்ற ஒரு பண்டிகை ஆகும். சிறுவர்களுக்குப் புத்தாடை, இனிப்புகள், மத்தாப்பு வெடிகள், மங்கையர்க்குப் புத்தாடை, அணிகலன்கள், நன்கொடைகள், பணியில் உள்ளவர்களுக்கு வெகுமதிகள், ஊக்க ஊதியங்கள், வியாபாரப் பெருமக்களுக்குப் புதுக்கணக்கு, லாப நோக்கு, புதுத்திட்டம் என்ற வகையில் எல்லா தரப்பினரும் எதிர்பார்த்து கண்டு களிக்கும் ஒரு பொதுப் பண்டிகை தீபாவளியென்றால் அது மிகையல்ல. இதனை இந்துக்கள் மட்டுமல்லாது கிறித்துவர்களும், முகமதியர்களும் கூட பங்குபெறும் ஒரு பாங்கான பண்டிகையாகிவிட்டது என்பது பரவிவிட்ட சமதர்ம நோக்கால் புலனாகும். இத்தகைய தீபாவளியின் சிறப்புக்களை சற்றே நாம் நோக்குதல் அவசியம்.

'தீ' என்றால் 'தீய' என்றும் 'பா' என்றால் 'பாவங்கள்' என்றும் 'அளி' என்றால் 'மறைதல்' என்றும் பொருள். அதாவது 'தீய பாவங்கள அழிந்து மறையும் பொன்நாள்' என்பது பொருள். தீபம் + ஆவளி என்று இதனைக் கொள்ள வேண்டும். 'பா' என்பதில் ப் + ஆ உள்ளது. 'ஆ' சேர்ந்து 'ஆவளி' என்றானது. அதாவது 'தீபங்களை வரிசையாக வைத்து (ஆவளி என்றால் வரிசை) வணங்கும் திருநாள்' என்பது விளக்கம். ஒளி மிகுந்த இறைவனை ஒளியுடைய விளக்குகளை வரிசையாய் வைத்து வணங்குதல் புனிதத்திலும் புனிதம் ஆகும். பாவை பிரிக்கும் போது 'ஆ' தனிப்பட வரும்போது 'தீப்' என்றாகிறது. 'தீப்' என்றாலும் விளக்கு என்பது விளங்கும். இன்னும் ஒரு விளக்கம். 'தீ' என்றால் 'இனிப்பான' என்பது பொருள். 'பா' என்பது 'பசுமையான (புதிய) பட்சணங்கள்' என்பதும் படும். 'அளி' என்பது 'அளித்தல்' ஆகும். (தருவது) தீபாவளி நன்னாளில் இனிப்பு பொட்டலங்கள் வழங்கும் வழக்கம் இப்படி ஒட்டியுள்ளது இதன் மூலம் விளங்கும். மாசி மாதம் அமாவாசைக்கு முன்தினம் சிவராத்திரி. அதுபோல் ஐப்பசி மாதம் அமாவாசைக்கு முன்தினம் தீபாவளி ஆகும். இதனையே கேதாரமா விரதம் என்றும் அழைப்பர். தலைசிறந்த விரதங்கள் எட்டு ஆகும். இதனுள் தீபாவளியும் ஒன்று. இதனை புலப்படுத்தும் பாடல் பாரீர்.

தொல்லை வல்வினை கழித்துத் தருஞ்
சோமவார மாதிரை நோன்பன்றிப்
புல்லிய உமாமகேச்சுரஞ் சிவராத்திரி
முறையில் பொருந்த நோற்கப்
பல்வினையும் தொலைந்திடும் கேதா-
ரமண விரதமிவை பரம நோன்பு
கொள்ளுறுசூற் படைவிரத மெனும்
எட்டுஞ் சிவவிரதங்குனிக்குங்காலே"

அதாவது (1) கார்த்திகை சோமவார விரதம் (2) உமாமகேஸ்வர விரதம் (3) திருவாதிரை விரதம் (4) மஹாசிவ ராத்திரி விரதம் (5) கல்யாண விரதம் (6) பாசுபத விரதம் (7) அஷ்டமி விரதம் (8) கேதாரமா விரதம்.

1வது-கார்த்திகை மாதம் திங்கட்கிழமையைக் குறிக்கும்.

2வது-கார்த்திகை மாதம் பௌர்ணமியைக் குறிக்கும்.

3வது-மார்கழி மாதத்தில் வருவது.

4வது-மாசி மாதத்தில் அமாவாசைக்கு முன் தினம்.

5வது-பங்குனி மாதம். பங்குனி உத்திரம்.

6வது-தைமாதம். தைப்பூசத் தினம்.

7வது-வைகாசி மாதம் பூர்வ பட்ச அஷ்டமியில் வருவது.

8வது-ஐப்பசிமாதம் அமாவாசைக்கு முன்தினம்.

மலைமகள் சிவபெருமானின் இடப்பாகம் பெற நோன்பு நோற்ற விரதமே கேதாரமா விரதம் ஆகும். இதனை கௌரி விரதம் எனவும் அழைப்பர். தீபாவளிக்கு மறுதினம்

(அமாவாசையில்) தாய்மார்கள் அதிரஸங்கள் சேர பலவகை பட்சணங்களுடன் புதிய முறத்தில் வைத்து மூடி அம்பாள் ஆலயத்துக்குச் சென்று நோன்பு எடுக்கும் வழக்கம் நிலவுவதைக் கண்டறிதலே இவ்விரதத்தின் சிறப்பு விளங்கும்.

இத்தகைய ஒளி மிகுந்த தீபாவளி என்பதை உணர்த்திக் காட்ட வந்ததுதான் மத்தாப்பு பட்டாசு வெடிகள் ஆகும். மகாலட்சுமி நம் இல்லத்துக்கு வர வேண்டும் என்று வரவேற்பதின் உத்தியே அத்தினம் வாயிலில் இருபுறமும் விளக்குகள் வைப்பது ஆகும். இப்பழக்கம் கர்நாடக மாநிலத்திலும் நாட்டின் வேறு சில பகுதிகளிலும் பின்பற்றப்படுகிறது. இதனை மெய்ப்பிக்கும் சிறிய கதை உண்டு.

அதாவது திருமகள் தெருவில் வந்து கொண்டு இருந்தாளாம். அங்கு நின்று கொண்டிருந்த இரண்டு பெண்கள் திருமகளை தத்தம் இல்லத்துக்கு வரவேண்டும் என்று வேண்டினார்கள். அப்போது திருமகள் யார் இல்லத்தில் நுழைவது என்று தயக்கம். நேரம் மாலை நேரம். திருமகள் இரண்டு பெண்களிடமும் யார் வீடு நிறையும்படி பொருளை நிரப்புகின்றீர்களோ அவர்கள் வீட்டில் நுழைவேன் என்று கூறினாள். இரண்டு பெண்களில் ஒருத்திக்கு புத்தி மட்டம். உடனே அருகே இருந்த குப்பைத்தொட்டியில் இருந்து குப்பைகளை எடுத்து வீட்டை நிரப்பினாளாம். மற்றவள் புத்திசாலி. ஒரு நொடியில் வீட்டில் நுழைந்து எல்லா அறைகளிலும் விளக்கை ஏற்றி வைத்துவிட்டாளாம். அவ்விளக்கின் ஒளி இல்லம் முழுவதும் பரவ திருமகள் அவ்வீட்டில் நுழைந்து தங்க ஆரம்பித்து விட்டாளாம். ஆக, ஒளியுடைய தீபங்களை வரிசை

பித்து விட்டாளாம். ஆக, ஒளியுடைய தீபங்களை வரிசை யாக வைத்து வழிபடும் நாளே தீபாவளி என்பது பொருந்துகிறது அல்லவா. நிறையும் ஒளியால் இல்லமும் உள்ளமும் இருள் அகன்று நிறைவுபெறட்டும் என்று நினைக்கும் நாளே தீபாவளி ஆகும்.

செல்வக்களிப்பில் மிதக் கும் மார்வாடிகள் என்னும் ஜெயின்ஸ் (சேட்கள்) தீபாவளி தினத்தன்று புதுக்கணக்கு துவங்கி பூஜை போடும் வழக்கம் நாட்டில் வந்தது, அன்று புண்ணிய தினம் என்பதாலேயேதான். இனி தீபாவளியில் நிகழும் சில சடங்குகளைப் பார்ப்போம்.

1. எண்ணை ஸ்நானம் - மாசுக்கள் உடலை விட்டும், மனதை விட்டும் போகட்டும் என்று.

2. புத்தாடை உடுத்தல் - புதிய திருப்பம், புது இன்பம், புது வாழ்வு பிறக்கட்டும் என்பது.

3. இனிப்பு உண்ணுதல்- இன்று போல் இந்த இனிப்பும் இனிமையும் நிலவட்டும் என்பது.

4. இனிப்பு வழங்கல் தானமே செய்யாதவர்கள் ஆயினும் அன்றுவது செய்யட்டுமே எனபது.

5. பட்டாசு வெடித்தல் - ஒளி பெருகட்டும். இருள் அகலட்டும் என்பது. எங்கும் இருக்கும் இறைவனுக்கு நம் உள்ளத்து ஒளியும், ஒலியும் தெரியட்டுமே என்பது.

6. தீபம் வைத்தல் - தனலட்சுமி இல்லம் நிறையட்டும் என்பது:

மறைகளும் காணமுடியாத இறைவன் ஒளியாக நின்றருளும் இயல்பினன் என்பதே உண்மை. இதனைத் தானே கண்டு தானே அனுபவித்த வள்ளல் பெருந்தகை ஸ்ரீ அருணகிரிநாதர் ஆவார். அதனால் தான் "மறை போற்றரிய ஒளியாய் பரவும் மலர்தாட் கமலம் அருள்வாயே" என்று இறைவனிடம் இறைஞ்சுகிறார். எனவே ஒளிமயமான இறைவனுக்கு ஒளியுடைய விளக்குகளை வரிசைப்படுத்தி வைத்து வணங்குதல் மிகப்பொருத்தமே. வேண்டுதல் வேண்டாமை இல்லாதவனுக்கு விளக்கேற்றுதல் சிறப்பு. அதனால் தான் வள்ளுவப்பெருந்தகையாரும் "வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல" என்று பொருத்தமாகக் கூறிவிட்டார். இவ்வாறு வணங்குவதால் நம்மிடையே வரும் நான்கு உயர் பொருள்கள் ஆவன: 1. கருணை 2. பொறுமை 3. தெளிவு 4. சாந்தி (அமைதி) இந்நான்கும் பெற்றவர்கள் நரகிடை புகமாட்டார்கள். நாம்

மந்திரங்களை சொல்லிமுடிக்கும் போது கூட இறுதியில் ஓம் சாந்தி சாந்தி சாந்தி' என்று முடிக்கிறோம். இறுதியில் பயப்பது சாந்தியாகும். எனவே தீபாவளி சாந்தியை அளிக்கும் நாள் என்பதும் கருத்து.

இத்தகைய தீபாவளியில் மனம் புண்படும் செயல் நாட்டில் நடக்கிறது. அன்று காலையில் எண்ணை ஸ்நானம் செய்ததும் மாமிசம் உண்பது. சிலர் மாமிசத்தோடு மது வையும் சேர்த்துக்கொள்கின்றனர். மதுவும், மாமிசமும் தினம் விரும்பும்போது சாப்பிடுவது தானே. தீபாவளி தினத்தில் அதை அகற்றுவது நல்லது. அன்றைய தினம் மது, மாமிசம் உண்பது மகா பாபம். பத்து தலைமுறைக்கு அப்பாவம் தொடரும் என்பார்கள். வாழ்நாளில் சேர்த்த புண்ணியமெல்லாம் அன்று ஒரே நாளில் இச்செயலால் போய் விடும். எனவே தீபாவளியில் மது, மாமிசம் உண்பதை விட வேண்டும். இப்படி பிறப்பினைத் தந்த பெருந்தகையாளனை நினைக்கவும், பற்றவும், விளக்கு வைத்து வணங்கவும் தேவைப்படுவது பக்தி ஆகும். அருணகிரிப் பெருமான் பக்தியால் உன்னை யான் பலகாலும் பற்ற வேண்டும் என்கிறூர். காரணம் கிருதயுகத்தில் யாகத்தால் முக்தி, திரேதாயுகத்தில் தவத்தால் முக்தி. துவாபரயுகத்தில் தானத்தினால் முக்தி, கலியுகத்தில் பக்தியினால் முக்தி. எனவே அருணகிரிப்பெருமானுடன் சேர்ந்து நாமும் "தீப மங்கள ஜோதி நமோ நம" என்று வந்தித்து வாழ்த்தி வணங்கி வளம்பல பெறுவோம் என்ற கோட்பாடு நமக்குள் பட்டாசு போல் இத் தீபாவளி தினத்தில் வெடிக்கட்டும் சிறக்கட்டும் என்று கூறுவோம்; குரல் கொடுப்போமாக.

ஒளியில் விளைவதுதான் உயர்வான ஞானம் ஆகும். "ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத்து உச்சியின்மேல்" என்கிறூர் அருணகிரிப்பெருமான். அவர் வாக்கிற்கு மறுப்பில்லை. எனவே இத்தகு சான்றுகளால் தீபாவளி என்பது ஒளிப்பண்டிகை அதுவே நம் வாழ்வின் வழிப் பண்டிகை என்பதைக் கண்டு தெளிந்து நல்வழி நடப்போம் நலம் பெறுவோம்.





அண்மையில் பாண்டிச்சேரியில் தி.தி. தேவஸ்தான தர்ம பிரசார பரிஷத் கிளை ஒன்று மாநில தலைமைச் செயலர் திரு. சாரி அவர்களால் துவக்கப்பட, இதுபோது சென்னை மற்றும் புதுவை மாநில அமைப்பாளர் திரு. ஆ.செ. நரசிம்மன், உள்ளிட்ட பல உள்ளூர் பிரமுகர்களும் கலந்து கொண்டனர். இறுதியில் நாட்டியம் மற்றும் பல சமய நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

# சுற்றும் பூமியைச் சுற்றும் மஹான்கள்

ஸ்ரீகோவிந்தராஜஸ்வாமி - ஸ்ரீரங்கம்.

கடல் சூழ்ந்த மண்ணுலகம் பூராவும் புண்ய பூமி எனப்படுகிறது. தானம், தவம், யக்ஞம் இவைகளை செய்வதற்கும், அவைகளுக்குரிய பலன்கள் நிர்ணயக்கப்படுவதற்கும் புண்ய பூமியே தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றது. உயிர் வாழிகள் தங்கள் கர்மாநுகுணத்திற்கேற்ப பல்வேறு பட்ட பிரிவுகளமைந்த பிறவிகளைக்கடந்து, அரிதான மானிடப் பிறவியைப் பெறுகிறான். இப்பிறவியில் அவனவன் முந்தைய பிறவிகளின் கர்மாநுகுணங்களுக்கேற்ப, மனிதப் பிறவியின் நியதியை ஒட்டி, பூமியின் இயலுக்கேற்ப சுகதுக்கங்கள் அனுபவிக்கப்பெற்று, ஸத் கருமங்களால் பகவானை ஆராதித்து, முடிவில் புண்ய பாபங்களை சுகமாகவும், துக்கமாகவும் கழித்து இரண்டும் ஒன்றுமில்லை என்ற நிலையில் கர்மத்தளைகளிலிருந்து விடுபட்டு, மீண்டும் பிறவா நிலையாகிற (பரமபதம்) உத்தமகதி பெறுகிறான். இதற்கு அடிப்படையாய் இருக்கும் புண்ய பூமி 'கர்ம பூமி' எனப்படுகிறது.

உயிர் வாழிகள் மனித நிலையில் இருந்து கொண்டு ஆற்றும் கர்மங்களை இரண்டு பிரிவுகளாக வகைப்படுத்தலாம். ஒன்று இஹசாதனமானது, மற்றொன்று பரசாதனமானது. மனிதன் கல்வி கற்று, தனக்கென்று ஒரு தொழிலை நிர்ணயித்துக் கொண்டு, அதனை தர்ம ரீதியில் நடத்தி, அதிலிருந்து பெறும் வருவாயில் அறவழியில் இருந்து வாழ்க்கையை நடத்துவது இஹ சாதனமான கர்மமாகும். இதனால் பரத்துக்கு பிரயோஜனம் இல்லை. மனிதன் குருவை நாடி மந்த்ர உபதேசம் பெற்று, குருவை முன்னிட்டு பகவானிடம் சரணாகதி செய்து, தினமும் பகவானை ஆராதித்தல், அவன் அடியார்களை நேசித்தல், பகவந் நாம ஜபம், இயன்ற தர்மங்கள், தானங்கள் செய்தல், தீர்த்தயாத்திரை செய்தல், இயன்ற அறங்களைச் செய்தல் ஆகியன பரசாதனமான கர்மமாகும். லோக ரீதியான தொழில்களில் ஈடுபட்டிருக்கும் பொழுதே, ஸத்காரியங்களையும் செய்துவர வேணும். சிறு பிராயம் முதற்கொண்டே பழகிவர வேணும்.

கட்டுப் படுத்த இயலாத மனதை அற வழியில் திருப்பி, தானும் அறவழியில் சென்று பகவானின் அனுக்ரஹத்தை சுலபமாய் பெறும் வழிகள் பலவற்றுள் தீர்த்த யாத்திரையை ரொம்பவும் சிறப்புடையதாக பெரியோர்கள் வகுத்திருக்கிறார்கள். பூமியைச் சுற்றிலும், அடியிலும் நீர் இருந்தாலும், கிணறு, குளம், குழாய்கள் மூலம் நீரைக் கண்டு பெறுகிறோம். இந்த ரீதியில் பகவான் 'கரந்தெங்கும் பரந்துளன்' என்றபடி எல்லாவிடங்களிலும் வியாபித்து இருப்பினும், திவ்ய க்ஷேத்ரங்கள் தோறும் கோயில்களில் பகவானை பல கோலங்களில், பல்வேறு நாமங்களில் சேவித்து மிகச்சுலபமாக அனுக்ரஹத்தைப் பெறுகிறோம்.

பாரத தேசம் எங்கிலும் அநேக புண்யத்தலங்கள் உள்ளன. ஒவ்வொரு க்ஷேத்திரமும், தலம், மூர்த்தி, தீர்த்தம், வ்ருக்ஷம், விமானம் என்ற ஐந்து அம்சங்களுடன் ஒவ்வொன்றும் தனிப்பட்ட பெருமைகளுடனும் புராதனமாய் விளங்குகின்றன. எல்லா க்ஷேத்திரங்களும் முறையே பல்வேறு வகையான வரலாறுகளை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவை. புண்ய க்ஷேத்திரங்களுள் பல மஹான்கள், ஆசார்யர்கள் அவதரித்த பெருமையை உடையன. மஹான்களும், ஆசார்யர்களும், சன்னியாசிகளான ஸ்ரீஜீயர் சுவாமிகளும் தீர்த்த யாத்திரை மேற்கொண்டு ஒவ்வொரு க்ஷேத்திரங்களாய் சேவித்து அடியார்களை ஆங்காங்கே அனுக்ரஹித்து உஜ்ஜீவிப்பித்து வருகிறார்கள். ஓரிடத்தில் நில்லாமல் புண்ய பூமியெங்கும் சஞ்சரித்துக் கொண்டிருப்பதால் ஸாதுக்களான சன்னியாசிகளுக்கு 'பரமஹம்ஸ பரிவ்ராஜகர்கள்' என்று பெயர்.

ஸ்ரீ ஸ்வாமி எம்பெருமானாரின் திருவடிகள் ஆசேது ஹிமா

சலம் வரையில் படாத இடங்களே கிடையாது. ஸ்ரீஸ்வாமி மணவாள மாமுனிகள் அந்திம தசையில் பத்ரி முதலான க்ஷேத்திரங்கள் செல்ல ஆசைப் பட்டார். அவருக்கு திருமேனி நோவு சாற்றி இருந்தபடியால் அவரால் செல்ல இயலவில்லை. தன் சார்பில் சிஷ்யர்களை அனுப்பினார். பரம பாகவதோத்தமர்களான சிஷ்யர்கள் வழியில் பல க்ஷேத்திரங்களை சேவித்துக்கொண்டு பத்ரி சென்றார்கள். ஆசார்யரின் ஆசியோடு வந்திருக்கும் அவர்களை எம்பெருமான் ஆங்காங்கே குளிர்ந்து வரவேற்றான். யாத்திரையை இனிதே முடித்துக் கொண்டு ஸ்ரீமணவாள மாமுனிகளிடம் திரும்பினார்கள். பகவத் பிரசாதங்களான அபய ஹஸ்தம், திருத்துழாய் முதலியவைகளை அளித்தார்கள். மாமுனிகளும் திவ்ய க்ஷேத்திரத்து எம்பெருமான்களை எல்லாம் நேரில் சேவித்த அனுபவத்தைப் பெற்று ரொம்பவும் சந்தோஷமடைந்தார். மாமுனிகளுக்காக சிஷ்யர்கள் யாத்திரை சென்று இனிதே பூர்த்தி செய்தார்கள்.

ஸ்ரீக்ருஷ்ண சைதன்யரின் திக்விஜயம் ரொம்பவும் ரஸமானது. அதில் அவர் பாதி சரித்திரம் அடங்கியுள்ளது. புண்ய பாரதம் முழுவதிலும் சஞ்சரித்திருக்கிறார். சில க்ஷேத்திரங்கள் அவர் ஓரிரு மாதங்கள் தங்கிய பெருமையை உடையன. அவைகளில் ஸ்ரீரங்கம் , காசி, பிருந்தாவனம் ஆகியவை முக்கியமானவை. பிருந்தாவனத்திலும், பூரி ஜகன்னாத தலத்திலும் வாழ்நாளின் பெரும் பகுதியைக் கழித்திருக்கின்றார். பூரியில் ஜகன்னாதப் பெருமானின் திருமுன்பே ஸ்ரீக்ருஷ்ணசைதன்யர் சாய்ந்து நின்று கொண்டு திருநாமசங்கீர்த்தனம் செய்த இடத்தில், இன்றும் அவர் சாய்ந்து நின்றதற்கான அடையாளங்கள் தெரிகின்றன. இவருடைய புண்ய யாத்திரையில் அகண்ட நாம சங்கீர்த்தனத்துடன் மக்கள் அனைவருக்கும் பகவத் திருநாமத்தை வாரி வழங்கிவிட்டார்.

திருப்புகழ் வள்ளிமலை ஸ்வாமிகள் என்று போற்றப்படும் சுவாமிகள் பல க்ஷேத்திரங்களை சேவித்துக் கொண்டு வரும் பொழுது ஸ்ரீரங்கத்துக்கும் வந்திருக்கிறார். அவர் வந்த அன்று வைகுண்ட ஏகாதசி நன்னாள் ஆகும். பல மஹான்களும், தாஸர்களும் தீர்த்த யாத்திரையாக பல திவ்ய க்ஷேத்திரங்களை சேவித்துக் கொண்டு வருகையில் ஆங்காங்கே, பகவந் திருநாம மஹிமையையும், அவன் வைபவங்களையும் கீர்த்தனை ரூபமாகவும், உபதேசமாகவும் மக்களுக்கு வாரி வாரி வழங்கி உஜ்ஜீவிப்பித்திருக்கிறார்கள்.

ஆழ்வார்களுள் திருமங்கையாழ்வார் தமது யாத்திரையில், சென்று சேவிப்பதற்கு அரிதான அஹோபில க்ஷேத்திரம் முதலான பல திவ்விய திருப்பதிகளுக்குச் சென்று எம்பெருமானை சேவித்து மகிழ்ந்து எம்பெருமானையும், சுற்றுப்புற சூழ்நிலைகளையும், க்ஷேத்திர வாஸிகளான ஸாதுக்களையும் பாலேய் தமிழால் பாசுரங்கள் பாடி மங்களாசாசனம் செய்திருக்கிறார்.

ஸ்ரீஆதி சங்கர பகவத் பாதாளும், ஸ்ரீஆனந்த தீர்த்தர் என்ற மத்வரும் புண்ய பாரதமெங்கிலும் சஞ்சரித்து பல திவ்ய க்ஷேத்திரங்களை சேவித்திருக்கிறார்கள். ஸ்ரீமத்வரின் திக்விஜயத்தில் 'ஸ்ரீமுஷ்ணம்' என்ற க்ஷேத்திரத்தின் விஜயம் ரொம்பவும் குறிப்பிடத்தக்க சிறப்பாம்சம் பொருந்தியது. இந்த தலத்தில் ஸ்ரீமத்வாசார்யர் ஒரு கர்ப்பிணிப் பெண்ணின் சிரமத்தை அறிந்து, அவ்வமயம் ஊரில் இருந்த தீர்த்த கஷ்டத்தை நீக்கவும் தனது தண்டத்தினால் பூமியை கிண்டி கங்கையையே வரவழைத்துவிட்டார். இன்றளவும் அந்த தீர்த்தம் மிகப் புண்ணியமான தீர்த்தமாய் 'தண்ட தீர்த்தம்' என்ற பெயரில் போற்றப்படுகிறது. ஸ்ரீமத்வாசார்யாரால் உண்டாக்கப் பெற்ற தீர்த்தங்கள் ஸ்ரீமுஷ்ணத்திலும், அவர் பிறந்த ஊருக்கு அருகிலும்தான் உள்ளதாகத் தெரிகிறது.

மஹாத்மா ஸ்ரீ க்ருஷ்ண பிரேமி சுவாமிகள் புண்ய பாரதமெங்கிலும் சஞ்சரித்து, ஸ்ரீமத் பாகவத ஸப்தாஹங்கள் நடத்தி, பகவந்திருநாம ஜபமொன்றே கலியில் பரம உபாயம் என்பதையும், ஸ்ரீகேசவனின் கீர்த்திகளையும் ஸ்வாநுபவத்துடன் தேன் மழையாய் பொழிந்து வருகிறார். அநேக மஹான்கள் புண்ய பாரதமெங்கிலும் விஜயம் செய்து, ஆன்ம கோடிகளை நல்வழிப்படுத்தி அருந்தொண்டாற்றி வருகிறார்கள்.

மஹான்களும், ஆச்சார்யர்களும் ஸ்ரீஸ்வாமி நம்மாழ்வாரைப் போன்று ப்ரேமிக பாவத்தில் எல்லா திவ்ய க்ஷேத்திரத்து எம்பெருமான்களையும் இருந்த இடத்தில் தியானத்தின் மூலமாகவும், வஸிக்கும் க்ஷேத்திரத்தில் உள்ள எம்பெருமானிடத்திலும் காண இயலும். அப்படி இருக்க ஆசார்யர்கள் யாத்திரை மேற்கொள்வதன் காரணம் பின் வருமாறு:-

1. யாத்திரை மேற்கொள்ளும் வியாஜத்தில் பல திவ்ய க்ஷேத்திரங்களிலும், அநேக இடங்களிலும் வஸிக்கும் பரம பாகவத குழாங்களைக் கண்டு அநுபவிக்கப் பெறவேணும்.

2. பலக்ஷேத்திரங்களிலுள்ள எம்பெருமான்களின் பல்வேறு வகையான அர்ச்சாவதாரங்களின் திருக்கோலத்தின் சௌந்தர்யங்களையும் கல்யாண குணங்களையும் நேரில் சேவித்து கண்களாரக் கண்டு அநுபவித்து மகிழவேணும்.

3. மழை ஒரு பகுதியில் பொழியும் பொழுது, அதனால் மற்றொரு பகுதியில் உள்ள பயிர்களுக்கு பிரயோஜனம் இல்லை. அவ்விடத்திலும் மழை பொழிய வேணுமல்லவா? அதைப் போன்று ஆசார்யர்கள், இருக்கும் இடத்திலுள்ள ஆன்ம கோடிகளை உஜ்ஜீவிப்பதோடு அல்லாமல், யாத்திரையாய் கிளம்பி அநேக இடங்களிலுள்ள ஆன்மகோடிகளையும் பகவந்நாமத்தாலும், கேசவனின் கீர்த்தியைக் கூறியும் உஜ்ஜீவிப்பிக்க வேணும்.

4. யதிகள் சில நியமங்களை ஒட்டி சஞ்சரிக்க வேணும். அப்படியே தர்மங்களை நிலைநாட்ட வேணும்.

இவ்வண்ணம் அநேக காரணங்களால் ஆசார்யர்களும், மஹாத்மாக்களும் யாத்திரை மேற்கொண்டு, கல்லிலும், முள்ளிலும் பாதசாரியாய் விஜயம் செய்து நம்மைத் தேடி வரும் அவர்களின் சௌலப்பியத்திற்கும், அன்பிற்கும் எல்லை இல்லை. திருக்குடந்தை ஆண்டவன் என்று கொண்டாடப்பெறும் ஸ்ரீமத் கண்ணன் ஆண்டவன் ஸ்வாமிகளும் வர்த்தமான ஸ்ரீமத் ஆண்டவன், ஸ்ரீமத் ரங்கநாத மஹாதேசிகஸ்வாமிகளும் (ஸ்ரீமுஷ்ணம் ஆண்டவன்) பாதசாரியாகவே புண்ய பாரதமெங்கிலும் விஜயம் செய்து தர்மத்தை நிலைநாட்டினார்கள்.

குமாரவாடி ஸ்ரீ உ.வே. இராமாநுஜாச்சார்ய ஸ்வாமி பரம பாகவதோத்தமர்களான திருமாலடியார் குழாங்களுடன் பாதசாரியாகவே பல திவ்ய க்ஷேத்திரங்களை மங்களாசாஸனம் செய்து கொண்டு யாத்திரையை இனிதே பூர்த்தி செய்து அருந்தொண்டாற்றி உள்ளார்கள். ஸ்ரீகாமகோடி பீடாதிபதி ஸ்ரீசந்திர சேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளும் (பெரியவர்) புண்ய பாரதமெங்கிலும் விஜயம் செய்திருக்கிறார்கள்.

மஹாத்மாக்களுடையவும், அடியார்களுடையவும் நல்வரவையே பகவான் எப்பவும் அதிகமாக விரும்புகிறான். திருமங்கையாழ்வாரின் விஜயத்தில் சில திவ்ய தலங்களில் ஆழ்வாரைக் கூப்பிட்டு பாடல் பெற்றிருக்கிறான். ஆழ்வார்கள், ஆசார்யர்கள், மஹான்கள், பாகவதோத்தமர்கள் ஆகியோர்களின் மங்களா சாஸனங்களின் பலத்தினாலேயே எம்பெருமான் தலங்கள் தோறும் சான்னித்தியமாக இருக்கின்றான்.

ஸ்ரீராமபிரான் லங்கா விஜயத்தின் பொழுது, திருவேங்கடமலை வழியாக அஹோபில க்ஷேத்திரம் வந்து, ஸ்ரீப்ரஹ்லாதவரதனை சேவித்து ஸ்தோத்திரம் செய்தார். ஸ்ரீராமர் செய்த ஸ்தோத்திரம் "ஸ்ரீந்ருஸிம்ஹ பஞ்சாம்ருத ஸ்தோத்திரம்" என்று அழைக்கப்பட்டு அடியார்களால் அநுஸந்திக்கப்பட்டு வருகிறது.

அர்ஜுனன் செய்த யாத்திரையின் விவரகளை மஹாபாரதம் வெகு அழகாக வர்ணிக்கிறது. ஸ்ரீக்ருஷ்ணரின் சகோதரர் பலராமரின் தீர்த்த யாத்திரையை ஸ்ரீமத் பாகவதம் வெகு ரஸமாக வர்ணிக்கிறது. பாண்டவர்களுடன் கௌரவர்களுக்கு யுத்த முயற்சி ஆரம்பமானதைக் கேள்விப்பட்டு பலராமர் தீர்த்த ஸ்னானம் செய்யப் போவதாய் காரணத்தைச் சொல்லிவிட்டு இரு கட்சியிலும் சேரப் பிரியமில்லாதவராய் துவாரகைவிட்டுச்சென்றார் என்பது பிரசித்தம்.

பிரபாஸதீர்த்தத்தில் ஸ்நாநமும் தர்ப்பணமும் செய்து யமுனை, ஸரஸ்வதி, கங்கை முதலிய தீரங்களிலுள்ள க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டு நைமிசாரண்ணியம் வந்தார். ஸத்ரயாகம் செய்து கொண்டிருந்த முனிவர்கள் அவரை எதிர் கொண்டு பூஜித்தார்கள். அங்கே வியாஸ மஹரிஷியின் சிஷ்யரான ரோமஹர்ஷணர் தன்னை எதிர் கொண்டழையாமல், நமஸ்காரமோ, அஞ்சலியோ செய்யாமலும் பிராம்மணர்களைவிட உயர்ந்த ஆசனத்தில் உட்கார்ந்திருந்ததைக்கண்டு கோபமடைந்தார். 'மஹரிஷியன் சிஷ்யனாக இருந்து, இதிஹாச புராண தர்ம சாஸ்திரங்களைக் கற்றறிந்தும் வணக்கமில்லாத இவருக்கு இவருடைய அறிவு கூத்தாடிக்குப் போல் பயனளிப்பதாக இல்லை. தர்மத்தை நடத்துபவர்களைப் போல் அதர்மம் செய்பவர்களை ஒழிக்க வேண்டும்.' என்று கூறி துஷ்டர்களையும் கொல்லாமல் விலகி வந்த பலராமர் ஸாதுவான ரோமஹர்ஷணரைத் தன் கையில் இருந்த தர்பை நுனியால் தட்டவே அவர் உயிரிழந்தார்.

முனிவர்கள் மனம் நொந்து, 'பிரபுவே! உங்களால் அதர்மம் செய்யப்பட்டது. ஸத்திரயாகம் முடியும் வரையில் பிராம்மணர்களுக்குரிய ஆஸனமும் சரீரத்தில் களைப்பின்மையும் இவருக்கு எங்களால் கொடுக்கப்பட்டிருந்தது. நீர் செய்த பாவத்திற்குப் பிராயசித்தம் செய்ய வேண்டும்' என்றுர்கள். பலராமர் 'இனி ரோமஹர்ஷணருடைய புத்திரன் ஆயுளும், புத்தி சக்தியும் உடையவராய் இவரைப் போல் புராணங்களைச் சொல்லுபவராகவும் ஆகட்டும்' என்று கூறினார். பின்பு பிராயச்சித்த நியமத்துடன் பன்னிரண்டு மாதம் பாரத வர்ஷத்தைப் பிரதக்ஷிணம் செய்து தீர்த்த ஸ்னானம் செய்யவேண்டுமென்று முனிவர்கள் அவரிடம் கூறி, தங்களின் யாகத்தைக் கெடுக்கும் பல்லவன் என்னும் அசுரனை வதம் செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்கள். அடுத்த பருவத்தில் பல்லவன் அங்கே வந்து யாக சாலையில் ரத்தத்தையும் மலத்தையும் வர்ஷிக்கவே அவனை வதம் செய்தார்.

பிறகு அம் முனிவர்களால் அனுமதி அளிக்கப்பெற்ற பலராமர் பிராம்மணர்களுடன் கௌசிகீ நதியையடைந்து அவ்விடத்தில் ஸ்நாநம் செய்த பிறகு ஸரயூ நதி எங்கிருந்து பெருகுகிறதோ அந்த நீர் நிலையை அடைந்தார். அவர் ஸரயூ நதியின் போக்கிலேயே பிரயாகை சென்று, அங்கு ஸ்நாநம் செய்து, தேவர்கள் முதலியவர்களுக்குக் தர்ப்பணம் செய்து புலஹாசிரமத்தை அடைந்தார்.

கோமதி நதியிலும், கண்டகியிலும், விபாசா நதியிலும், சோணநதியிலும் நீராடி, கயா க்ஷேத்திரத்தை அடைந்து பிதுருக்களைப் பூஜித்து, கங்கை சமுத்திரத்தில் சேருமிடத்தில் ஸ்னானம் செய்து, மஹேந்திர மலையில் பரசுராமரைத் தரிசித்து நமஸ்கரித்து, கோதாவரி ஏழாகப் பிரிந்து கடலில் சேருமிடத்தையும், கிருஷ்ணவேணி நதியையும், பம்பாஸரஸ்ஸையும், பீமரதி நதியையும் அடைந்தார்.

பின்பு ஸ்கந்தரை தரிசித்து பலராமர் ஸ்ரீசைலம் என்ற சிவக்ஷேத்திரத்தை அடைந்தார். பின்பு திராவிட தேசத்தில் மஹா புண்ணிய க்ஷேத்திரமான வேங்கட மலையைத் தரிசித்துக் கொண்டு, காமகோடி என்று பிரசித்தமான காஞ்சீ புரியையும், காவேரீ நதியையும், எந்த இடத்தில் ஸ்ரீமஹா விஷ்ணு ஸாந்நித்தியமடைந்திருக்கிறாரோ அந்த மஹா புண்ணியமான ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தையும் தரிசித்தார்.

விஷ்ணு க்ஷேத்திரமாகிய ரிஷபாசலத்தையும், அவ்வாறே தென் மதுரையையும் தரிசித்துக் கொண்டு, ஸமுத்திரத்தில் கட்டப்பட்ட ஸேதுவை அடைந்தார். அவ்விடத்தில் பலராமர் பிராம்மணர்களுக்கு பதினாயிரம் பசுக்ககளைத் தானம் செய்தார். கிருதமாலா நதியையும், தாமிரபரணீ நதியையும், மலயமென்ற குலபர்வதத்தையும் அடைந்து அங்கு வீற்றிருந்த அகஸ்தியருக்கு அபிவாதனத்துடன் நமஸ்கரித்து, அவருடைய ஆசீர்வாதத்தைப் பெற்று, அவருடைய அனுமதியுடன் தெற்கு சமுத்திரத்தை அடைந்து அங்கே கன்யாகுமரி என்று பெயர் பெற்ற துர்கா தேவியைத் தரிசித்தார். அங்கிருந்து மகாவிஷ்ணு எங்கு பள்ளிகொண்டுள்ளாரோ அந்தப் பால்குனம் என்ற அனந்த சயனத்தை அடைந்து, உத்தமமான பஞ்சாப் ஸரஸ் தீர்த்தத்தில் நீராடி பதினாயிரம் பசுக்களைக் தானம் செய்தார்.

அங்கிருந்து பலராமர் கேரள தேசத்தையும், த்ரிகர்த தேசத்தையும், எங்கே பரமசிவனுடைய சாந்நித்தியமிருக்கிறதோ அந்த கோகர்ணம் என்று பெயர் பெற்ற சிவக்ஷேத்திரத்தையும் அடைந்து பிறகு, தீவின் நடுவில் உறைகின்ற அம்பிகையை தரிசனம் செய்துகொண்டு சூர்ப்பாரகத்தை அடைந்தார். தாபீ நதியிலும், பயோஷ்ணி நதியிலும், நிர்விந்தியா நதியிலும் நீராடிய பிறகு, தண்டகாரணியம் சென்று எந்த இடத்தில் மாஹிஷ்மதி நகரமிருக்கிறதோ அங்கு ரேவா நதியை அடைந்தார். மனு தீர்த்தத்தில் நீராடி மீண்டும் பிரபாஸ தீர்த்தத்தை அடைந்தார்.

கௌரவ பாண்டவயுத்தத்தில் எல்லா அரசர்களும் மாண்டு போனதை கேள்வியுற்று பூபாரம் குறைந்ததாக எண்ணினார். அப்போதும் பீமனும், துரியோதனனும் கதாயுத்தம் செய்துகொண்டிருந்ததாகக் கேள்விப்பட்டு, அவர்களைத் தடுப்பதற்காக பலராமர் குரு க்ஷேத்திரம் சென்றார். அவரைப் பார்த்து நஹுலர், சஹாதேவர், யுதிஷ்டிரர், அர்ஜுனன், க்ருஷ்ணன் எல்லோரும் நமஸ்கரித்தனர். பலராமர் பீமசேனனையும், துரியோதனனையும் அன்பு கனிந்த மொழிகளால் யுத்தத்தை விடுமாறு கூறினார்.

அவர்கள் இருவரும் பலராமருடைய வார்த்தையை ஏற்றுக் கொள்ளவில்லை. பலராமர் அவர்களுடைய தலையெழுத்து இவ்விதம் என்று எண்ணிக் கொண்டு துவாரகாபுரி சென்றார். அன்பு நிறைந்த உக்ரசேன மகாராஜா முதலிய பந்துக்களுடன் சேர்ந்தார். போரெல்லாம் முடிந்த பிறகு மனக்குழப்பம் நீங்கி பலராமர் மீண்டும் நைமிசாரண்யம் செல்லவே யஜ்ஞ மூர்த்தியாகிய அவருக்கு ரிஷிகள் ஸந்தோஷமாக எல்லா யாகங்களையும் செய்து வைத்தார்கள். தமது மனைவியுடன் அவபிருத ஸ்னானம் செய்து யாத்திரையை இனிதே நிறைவு செய்து, நல்ல வஸ்திரங்களையும், ஆபரணங்களையும் அணிந்து உற்றாருறவினர் சூழ தனது நிலவினால் பிரகாசிக்கும் சந்திரன் போல் விளங்கினார்.

ஒவ்வொரு தலங்களிலும் கோயில்களில் பிரும்மோத்ஸவம் நடைபெறும். வருடா வருடம் இவ்வுத்ஸவம் நடத்தப்படுவதனால் பகவானின் சான்னித்திய விசேஷம் அதிகரித்திருக்கிறது என்பது கோட்பாடு. ஆயினும் இத்தகைய உத்ஸவம் என்கிற வியாஜத்தில், பகவான் பக்தர்களை நாடி வருகிறான். கோயிலில் சேவிக்க இயலாதவர்களுக்கு பலவித வாகனங்களில் சர்வாலங்கார பூஷிதனாக சேவை சாதிக்கிறான். பல ஊர்களிலிருந்தும் அடியார்கள் உத்ஸவ தினங்களில் குழுமி எம்பெருமானை பூஜித்து குதூகலிக்கிறார்கள். பெரியோர்கள் உத்ஸவத்தை முன்னிட்டு தீர்த்த யாத்திரை செய்கிறார்கள்.

பலவித தோஷங்கள் நீங்கப் பெறவும் பிராயச்சித்தமாகவும் தீர்த்தயாத்திரை வகுக்கப்பட்டுள்ளது. ஸாதுக்கள் பகவானின் சேவையையும், முகோல்லாசத்தையுமே பரம ப்ரயோஜனமாய் கொண்டு தீர்த்த யாத்திரையின் மூலம் ஆங்காங்கே பகவந்நாம வைபவ ப்ரசாரம் செய்து உஜ்ஜீவிப்பித்து வருகிறார்கள்.

ஒவ்வொருவரும் இயன்றவரை க்ஷேத்திரங்களை சேவித்து வருதல் ரொம்பவும் இன்றியமையாதது. இயலாதவர்கள் ஸ்ரீமந் மணமாள மாமுனிகளைப் போல் இருந்த இடத்திலிருந்தே எம்பெருமானின் வடிவழகை த்யானித்து, எம்பெருமானின் ப்ரசாதங்கள் கிடைக்கப்பெற்றாலும் பரம த்ருப்தி அடைந்து, திவ்ய க்ஷேத்திர யாத்திரை செய்த நிறைவை எய்தலாம்.

திருநாராயணபுரம் என்ற தலத்தில் ஒரு குடிசையாவது கட்டிக் கொண்டு வாழவேணும். இயலாதவர்கள் ஒரு இரவாவது தங்கவேணும். திவ்விய தலங்களில் வஸித்துக்கொண்டு இயன்றவரை திருக்கோயிலில் எம்பெருமானுக்கு கைங்கர்யங்கள் (தொண்டுகள்) செய்து வரவேணும் என்பது ஸ்ரீஸ்வாமி எம்பெருமானாரின் அந்திம நேர இலகுவான உபதேச வார்த்தையாகும். பண்டரீபுரம் என்னும் தலத்தில் இன்றும் அடியார்கள் குழுமி, பகவந்திருநாம சங்கீர்த்தனம் செய்து பாடி ஆடிப் பரவுவதை கண்டு ஆனந்திக்கலாம்.

பெரியோர்கள் காட்டிய வழியில் புண்ய திருத்தல யாத்திரை மேற்கொண்டு உயர்வடைவோமாக. நித்யஸ்ரீ: நித்ய மங்களம்.



# யாதவாப்யுதயம்

திரு. எல். ஸ்ரீநிவாசன் - புதுடில்லி.



**யாதவாப்யுதயம்** என்னும் *மஹா* காவ்யம் கவிதார்க்கிக ஸிம்ஹம் என்கிற ஸ்வாமி வேதாந்த தேசிகனால் அருளப்பட்ட க்ருஷ்ணனின் திவ்ய சரிதம். இது ஓர் அரும் பெரும் கவிதை. இது காளிதாஸனின் ரகுவம்சம், குமார ஸம்பவம் போன்றது. இதில் 24 ஸர்கங்களும், 2500க்கு மேற்பட்ட ச்லோகங்களும் உள்ளன. பகவானின் பல ரூபங்களிலும் ஸ்வாமி தேசிகனுக்கு க்ருஷ்ணனிடமுள்ள பக்தி அபூர்வமானது, ஆச்சர்யப்படத்தக்கது. கோபாலவிம்சதியில் (14) க்ருஷ்ணனின் உருவம் தமது ஹ்ருதயத்தில் ஏதோ ஒரு ஓவியனால் வரையப்பட்டுள்ளதாக அருளியுள்ளார். கேந (கேன) யாரோ ஒருவரால் என்பதை கேந (கேன) **யாரால்** என்று கேள்வியாகவும் கொள்ளலாம். அந்தக் கேள்வியிலே பதிலும் அடங்கியுள்ளது. கம் (கம்) என்னும் ப்ரஹ்மத்தினால் என்று பதில். சாந்தோக்யோபநிஷத் (4-10-5) ப்ரஹ்மத்தை கம் (கம்) என்று கூறுகிறது. யதிராஜஸப்ததியில் (24) அந்த ஓவியன் ஸ்ரீராமானுஜரே என்ற பதில் உள்ளதாகவும் தோன்றும். கம் (கம்) என்பது ஸுகத்தையும் குறிப்பதால் இந்த சில்ப கார்யம் ஆனந்த பரீவாஹத்தினால் செய்யப்பட்டது என்று தேறும் (ஸங்கல்ப ஸூர்யோதயம் 7-7) வாசாம கோசரனான கண்ணனின் அழகை ஸ்வாமி தேசிகன் எப்போதும் த்யானம் செய்கிறார் (கோபாலவிம்சதி 13). அவருடைய ப்ரார்த்தனை ஒன்றே - தாம் சரீரத்தை விடும் போது க்ருஷ்ணனின் ஒன்றல்ல, பல உருவங்கள் தம்முன் தோன்ற வேண்டுமென்பதே (கோபாலவிம்சதி 12). கோபால விம்சதியை இயற்றும் போது தமது மனது வேறொன்றிலும் செல்லாமல் கண்ணனிடமே ஊன்றியிருந்தது என்று கூறி அதை முடிக்கிறார். அந்த கோபாலவிம்சதியிலுள்ள முதல் ச்லோகமே யாதவாப்யுதயத்தின் ஆரம்ப மங்கள ச்லோகமுமாகும். மற்றும், அதிலிருந்து நான்கு ச்லோகங்கள் யாதவாப்யுதயத்தில் இடம் பெறுகின்றன. (15-87 முதல் 90 வரை).

கோபாலவிம்சதி க்ருஷ்ணனைப் பற்றிய ஸ்தோத்ரம். எனவே அதில் க்ருஷ்ண பக்தி எதிர்பார்க்கப்பட வேண்டியதே என்று சிலர் நினைக்கலாம். நாராயணன் அல்லது விஷ்ணு போன்ற வேறு பெயர்களை உபயோகித்தால் போதுமான இடங்களிலும் ஸ்வாமி தேசிகன் கண்ணனின் நாமத்தையே எடுத்திருப்பதால் அவருடைய விசேஷ க்ருஷ்ண பக்தி தெள்ளென விளங்கும். உதாரணமாக அதிகரணஸாராவளி (322); அம்ருதாஸ்வாதினீ 24, 35 (கண்ணன் கழல், பாவளரும்), அதிகாரஸங்க்ரஹம் 43 (கண்ணடியினை) முதலியவற்றைக் காணலாம். ஆகவே, ஸ்வாமி தேசிகன் தமது விசேஷ பக்தித் திறனைத் தமது ஆராத்ய தேவதையான க்ருஷ்ணனின் சரிதையை வர்ணிக்கும் உயர்ந்த காவ்யத்தில இயற்றுவதில் உபயோகப்படுத்தியது

உசிதம், எதிர்பார்க்கக்கூடியதே.

## காவ்ய உதயம்

ஐதியஹ்யத்தினபடி டிண்டிம ஸார்வபௌமன் எனனும் கவி ஸ்வாமி தேசிகனிடம் தோற்றுத் தனது ராகவாப்யுதயம் என்னும காவ்யத்தைக காண்பிக்க, வேதாந்ததேசிகனும் யாதவாப்யுதயத்தை அருளினார். இதை தொட்டையாசாரியார் வைபவ ப்ரகாசிகையில் (ச்லோகம்) அறிவித்துள்ளார்.

## பெயரின் விளக்கம்

யது வம்சததினரான யாதவர்கள் அரசரகளாகாதபடி யயாதியால் சபிக்கப்பட்டிருந்தனர். எனவே, யாதவன் என்ற பெயர் இழிவாகக் கருதப்படலாம். இதை எணணியே, விச்வரூபத்தைக்கணடு கண்ணனின மேன்மை உணர்ந்த அர்ஜுனன், அவரைத் தான் யாதவன என்று கூப்பிட்டதற்கு மன்னிப்பு தேடுக்கொண்டான் (கீதை 11-41). ஆயினும் க்ருஷ்ணன் யதுச்ரேஷ்டன் எனபதில் ஐயமில்லை. அது விஷ்ணு ஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்திலுள்ள ஓர் நாமம் (710). அதறகு வயாகயானம் அருளிய ஸ்ரீபராசர பட்டர ஸ்ரீவிஷ்ணு புராணத்திலிருந்து (5-20-49) ஓர் ச்லோகததை உதாஹரிக்கிறார. க்ருஷ்ணன் மல்லரகளுடன யுத்தம புரிய ஆரம்பிக்கும் போது இது ந்யாயமான யுத்தமில்லை என்று பலர் சங்கிக்கையில், சில தீர்க்கதரசிகள் கண்ணன யாதவ குலத்தை மேலோங்கச் செய்யப் போகிறான் என்று கூறினர என்று அந்தச சலோகத்தின் பொருள் (யாதவாப்யுதயம் 10-93ம் காண்க). ஸ்வாமி தேசிகன் அந்தப் பொருளையே கொண்ட 'யாதவாப்யுதயம்' என்ற பெயரையே தமது காவ்யத்துக்குச் சூட்டியுள்ளார். இதிலுள்ள கண்ணனின் சரிதை யாதவரகள் ஒப்பற்ற மேன்மைக்கு உயர்வதைக் காண்பிக்கிறது. மேலும் ரகுவமசம் அமங்கமாக முடிவது போலில்லாமல் இந்நூல் மங்களகரமாக முடிகிறது என்பதையும் இத்தலைபபு ஸூசிக்கிறது.

## காவ்யத்தின் பொருளடக்கம்

யாதவாப்யுதயத்திலுள்ள விஷயங்கள் கீழே சுருக்கமாகக் கொடுக்கப்படுகின்றன.

ஸர்க்கம் 1-வஸுதேவர் வரை யதுவம்ச வர்ணனை, வஸுதேவரைக் கம்ஸன் கைது செய்தல, பூமிதேவி பகவானிடம் பூபாரத்தைக் குறைக்குமபடி ப்ரார்த்தித்தல்.

ஸர்க்கம 2-தேவகியின் திவய கர்பமும் க்ருஷ்ணவதாரமும.

ஸர்க்கம 3-க்ருஷ்ணனை கோகுலத்துக்கு எடுத்துசசெல்லுதல், கம்ஸனை மாயை பரிஹஸித்தல்.

ஸர்க்கம் 4-குழநதைக் கணணனின் அபூர்வச்செயலகள், பூதனாவதம் முதல காளியாநரத்தனம் வரை.

ஸர்க்கம் 5-ஆனிரை மேய்தல், ருதுக்களின வரணனை.

ஸர்க்கம் 6-தக்க காரணங்களுடன் கணணன் இந்திரவிழா வைத் தடுத்தல.

ஸர்க்கம் 7-கோவர்த்தனோத்தாரணம்.

ஸர்க்கம் 8-வஸந்தருது, ராஸக்ரீடை வரணனம.

ஸர்க்கம் 9-கேசிவதம், மதுரைக்குசசெல்லும கண்ணனைப் பிரிந்த கோபிகளின விலாபம்.

ஸர்க்கம் 10-கம்ஸவதம்.

ஸர்க்கம் 11-த்வாரகா ஸ்தாபனம், அதன் வரணனை.

ஸர்க்கம 12-ருக்மணியின் ஸௌந்தர்ய லாவணய வரணனை

ஸர்க்கம் 13-ருக்மணி பரிணயம.

ஸர்க்கம 14-ஜாமபவதீ, ஸ்த்யபாமா ஆகியோரைக் கண்ணன் மணந்து கொளளுதல.

ஸர்க்கம் 15-சிசுபாலவதம்.

ஸர்க்கம 16-நரகாசுரவதம், இந்திரனின நந்தன வரணனை.

ஸர்க்கம 17-பாரிஜாதாபஹரணம்.

ஸர்க்கம 18-கணணன ஸவரக்கததிலிருநது த்வாரகைககு ஆகாய மாரக்கமாகத திருமபுதல், பாரத வரஷத்தின் வரணனை.

ஸர்க்கம் 19-வேதஙகள் க்ருஷண பகவானுககு ஸுப்ரபாதம் பாடுதல்.

ஸர்க்கம 20-பாணாஸுரனை கண்ணன ஜயித்தல், உஷா-அநிருதத பரிணயம்.

ஸர்க்கம 21-பௌணடரவா

ஸுதேவவதம், காசியின் த்வம் ஸம்.

ஸர்க்கம் 22-ஸாத்யகி மூலம் திக்விஜயம்.

ஸர்க்கம் 23-மஹா பாரதயுத் தத்தை ஜயித்தல்.

ஸர்க்கம் 24-கண்ணன் மஹி ஷிகளுடன் ரமித்தல்.

## வியாக்யானம் ஏற்பட்டவிதம்

இந்த சிறந்த காவ்யத் திற்கு அத்ருஷ்டவசமாக ஸம மான பெருமையுள்ள ஓர் உயர்ந்த வ்யாக்யானம் அப் பைய தீக்ஷிதர் என்னும் ஸ்ர்வ தோமுக ப்ரதிபாசாலியான அத் வைத பண்டிதரால் இயற்றப் பட்டுள்ளது. தமது ஆரம்ப ச்லோகங்களில் தீக்ஷிதர் பின் வருமாறு கூறியுள்ளார். இந்த அரும்பெரும் காவ்யத்தை சின் னதிம்ம ராஜா என்னும் அர சன் வித்வான்களின் சபையில் கேட்டு ஆனந்தித்து ஆஸ்தான வித்வானான தீக்ஷிதரை இதற் குத் தகுந்த ஓர் வ்யாக்யா னம் எழுதும்படி கட்டளையிட் டானாம். கோபால விம்சதியில் (12) ஸ்வாமி தேசிகன் கண்ண னின் நிறத்தை இந்திர நீலக் கல்லின் உட்புறம் போன்றது என்று வர்ணிக்கிருர். தீக்ஷிதர் கிருஷ்ணனின் சரித்ரமான இந்த யாதவாப்யுதயததையே இந்திர நீலக்கல் என்று வர்ணித்து, இதைக் காவ்யரத்தினம் என்று ஸ்வாமி தேசிகன் கூறுவது முற் றும் சரியே என்று ஆமோ திக்கிருர். இது அபிஜாதம், உயர்ந்த ஜாதியைச் சேர்நதது என்கிருர. வைரத்தை ராவி பள பளப்பாக ஜ்வலிக்கச்செய்வது போல் தாம் இந்த ரத்னத்தைத் தமது வ்யாக்யானத்தின் மூலம் பரிஷ்காரம் செய்து, அதன் உட் பொருள்கள், ரஸங்கள் முதலி யவற்றை வெளிப்படுத்தி ப்ர காசிக்கும்படி தாம் செய்வதாகக் கூறுகிருர். இந்த உத்தம காவ் யத்திற்கு ஸ்ரீவைஷ்ணவப் பெரி யார் ஒருவரும் வ்யாக்கியானம் செய்யாதது வியப்பே. இதைக் கண்ட அரசன், "வைஷ்ணவர் கள் அரசிகர்கள், இந்தக் காவ் யம் அவர்களிடம் இருப்பது ஓர் அழகான இளம்பெண் ஓர் பேடியிடம் இருப்பதற்கு சமம்" என்று கூறியதாகச் சொல்லப் படுகிறது. தீக்ஷிதரின் வியாக் யானத்தில் சிலபாகங்கள் இங் குமங்கும் லோபமாகியுள்ளன.

## வ்யாக்யாதாவின் வைதுஷ்யம்

ஸ்வாமி தேசிகனின் அவதா ரஸ்தலமான காஞ்சியின் அரு கில் ஒரு கிராமததில் சிறந்த பண்டிதர் குலததில் பிறந்தவர் அப்பைய தீக்ஷிதர. சகல சாஸ்திரங்களிலும், இலக்கியங் களிலும் ஆழ்ந்த ஜ்ஞான முள்ள இந்த மஹாவித்துவான் ஸ்வாமி தேசிகனைப் போலவே நூற்றுக்கு மேலான நூல்களை இயற்றி மற்ருேர் ஸர்வ தந் திர ஸ்வதந்திரர் போல் விளங் கினார். அவருடைய குடும் பத்தில் வைஷ்ணவ ஸம்பநதம் இருந்ததால் அவர் ப்ரபத்தி போன்ற விஷயங்களை சரிவர அறிந்து தமது வ்யாக்கியானத் தில் விளக்கியுள்ளார். (உதாஹ ரணம் 10-75) மஹா வேதாந்தி யான தீக்ஷிதர் தமது பாண்டி யத்தினால் பரஹ்ம ஹுத்த ரங்களுக்கு சங்கரர், ராமாநுஜர், மாத்வர், நீலகண்டர் ஆகியோ ரின் மதப்படி நான்கு வ்யாக் கியானங்களை இயற்றியுள்ளார். க்ருஷ்ண கர்ணாம்ருதத்தில் (2-24) லீலாசுகர தாம் சிவனை வழி படுபவராகவும், பஞ்சாக்ஷர மந் திரத்தையே எப்போதும் உருப் போடுவராக இருந்தும், தமது மனது கிசோர க்ருஷ்ண னையே நாடுகிறது என்று கூறியுள்ளார். அதே போல் தீக்ஷிதரும் சிறந்த சிவபக்தரா யிருந்து, சிவனின் பரத்வத்தை நிலைநிறுத்தப் பல நூல்க ளில் முயன்றிருந்தும், தமது வாழ்க்கையில் ஒரு ஸமயத் தில் விஷ்ணு பக்தராயிருந்தார் என்பது அவருடைய க்ருஷ்ண த்யான பத்ததி, வரதராஜஸ்த வம் ஆகிய நூலகளிலிருந்து விளங்குகிறது. எப்படியும் தமது சொந்த அபிப்ராயங் களை வ்யாக்கியானத்தில் புகுத் தாமல், ஸ்வாமி தேசிகனின் திருவுள்ளத்தைத் தழுவியே கருத் துரைத்திருப்பது மெச்சத்தக் கது.

## தீக்ஷிதரின் தவறுகள்

தீக்ஷிதரின் உரையில் சில குறைகள் காண்கின்றன. சில உதாஹரணங்களை இங்குக் குறிப்பிடுவோம்.

(1) 1-99ல் ஸ்வாமி தேசி கன், தேவர்களின் ப்ராத்தனைக் கிணங்கி பகவான் தேவகீ ஸுத னாக அவதரிக்க ஸங்கல்பித்த போது அவரை अनघः (அநக:) என்று விசேஷித்துள்ளார். தீக்ஷி தர் ஜீவர்களின் கர்மத்துக்குத் தகுந்தபடி பகவான் பலப்ரதா னம் செய்வதால் அவர் பக்ஷ பாதம் என்னும் குற்றமற்றவர்

என்று இதற்கு உரைசெய்தார். ஆனால் இங்கு விஷயம் பகவான் செய்யப்போகும் அவதாரமேயல்லது ஸ்ருஷ்டியல்ல. ஆகவே குற்றமற்றவர் என்பதற்கு ஜீவர்களைப் போல் கர்மத்தினால் ஜன்மம் எடுக்கும் மாசற்றவர் என்பதே பொருத்தமான பொருள். ச்லோகத்தின் கடைசிப்பாதமும், தனது தயையை வெளியிட எம்பெருமான் ஸமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் என்று கூறுவதனால் இதனை வெளியாக்குகிறது. ஆகவே அவதாரத்தின் காரணம் தயை, கர்மமல்ல என்பதே ஆசிரியரின் கருத்து என்பது தெளிவு. இதை உணரத்தவறி விட்டார உரைகாரர்.

(2) 4-16ல் பெயரை முழுவதும் உச்சரிக்க முடியாவிட்டாலும் குழந்தை கண்ணன் பஹுமான பாத்ரமானான் என்று கவி கூறியுள்ளார். ச்லோகத்தின் பின்பாதி வருமாறு:

नामैकदेशग्रहणेन कृष्णो बभूव
मातुर्बहुमान पात्रम् ।

(நாமைகதேச க்ரஹணே பபூவ மாதுர் பஹுமான பாத்ரம்)

க்ருஷ்ணன் தாயின் பெயரை முழுவதும் கூறமுடியாமல் அரைகுறையாகச் சொன்னபோதிலும், உறவினர்களின் தோத்திரத்திற்குப் பாத்திரமானான் என்று உரை செய்தார் தீக்ஷிதர். ச்லோகத்தில் உறவினர்கள் கூறப்படவில்லை. மேலும் தாயின் பெயர் என்று கொள்ள ஒரு வித நிர்பந்தமுமில்லை. எவருடைய பெயரை குழந்தை கொச்சையாகக் கூறினாலும் தாய்க்கு ஆனந்தம் ஏற்படுவது இயற்கையே. குழந்தை பேச ஆரம்பிக்கும் போது அது எந்த பேச்சாயிருந்தாலும் மற்றவர்களைக் காட்டிலும் தாய்க்கு அதில் அதிக ஸந்தோஷம் ஏற்படுவது உண்மை என்று கொள்வதே சரியான பொருளாகும்.

(3) ஒருவருக்கொருவர் தகுந்த யௌவனமும் அழகும் பொருந்திய க்ருஷ்ணனும் ருக்மணியும் ஸந்தித்த போது ருக்மணியின் தோழிகள் கண்கொட்டாமல் பார்ப்பதால் அப்ஸரஸ்களுடன் பூர்ண ஒற்றுமை அடைந்தனர் என்று 13-13ல் ஸ்வாமி தேசிகன் வர்ணிக்கிறார். வேதாந்தசார்யார் வீண் சப்தங்களை உபயோகிப்பவரல்ல, அர்த்தமில்லாமல் பதங்களைப் பிரயோகம் பண்ணமாட்டார் **என்பது** யாவரும் **அறிந்ததே. இங்கு "பூர்ண"** என்ற பதத்தின் அரும்பொருளை தீக்ஷிதர் நழுவவிட்டது பெருங்குறையே. ஏற்கனவே அப்ஸரஸுகளுக்கு ஸமமாக இருந்த தோழிகள் கண்கொட்டுவதில் மட்டும் வேறுபட்டிருந்தனர். இப்போது கண்கொட்டாமலிருந்ததால் அந்த வேற்றுமையும் ஒழிந்து எல்லாவிதத்திலும் அவர்களுக்குச் சமமாயினர் என்பது கவியின் உட்கருத்து.

## காவ்யத்தின் பெருமை-பரிசயம்

இந்த காவ்யத்தில் எவ்வளவு ஆழ்ந்த கருத்துக்களும் உயர்ந்த மனோபாவங்களும் உள்ளன என்பதை விளக்க இரண்டு உதாரணங்களைக் கவனிப்போம்.

वन्दे वृन्दावनचरं वल्लवीजनवल्लभम् ।
जयन्ती संभवं धाम वैजयन्ती
**विभूषणम्** ॥ (१-१)



**திருவேரகக் கோயிலின் தெற்கு ராஜகோபுரம்.**

"வ்ருந்தாவனத்தில் ஸஞ்சாரம் செய்ததும், கோபிகைகளின் ப்ரியத்திற்குப் பாத்திரமானதும், ஸ்ரீஜயந்தியில் அவதரித்ததும், வைஜயந்தி மாலையால் அலங்கரிக்கப்பட்டதுமான சோதியை வணங்குகிறேன்."

இங்குக் கீழ்க்குறிப்பிடும் ரஸமான விஷயங்கள் கவனிக்கத் தக்கவை.

(1) वं என்னும் அம்ருதாக்ஷரத்தில் நூலைத் தொடங்குவதால் கவி ஒரே ஸமயத்தில் இரண்டு விஷயங்களை ஸாதிக்கிறுர். 1. காவ்யத்தை மங்களகரமாக ஆரம்பித்தல், 2. அம்ருத துல்யமான (1-3) கருஷ்ண சரித்ரத்தை வர்ணிப்பதால் இந்த க்ரந்தமும் அம்ருதத்தைப் போல் இனிதாகவும் உயிரளிப்பதாகவுமுள்ளது என்றும் காட்டியபடி.

(2) ரகுவம்சத்தில் காளிதாஸன் மங்களச்லோகத்தில் वन्दे என்ற சொல்லை நடுவில் அமைத்தான். நமது கவிக்குத் தமது இஷ்டதேவதையிடமுள்ள அபாரசக்தி वन्दे என்ற சொல்லிலேயே ஆரம்பிககும்படி செய்கிறது. க்ருஷ்ணனை நினைத்ததும் ஸாஷ்டாங்கமாக ப்ராணமம் செய்கிறுர்.

(3) ரகுவம்சத்தின் கதாநாயகனான ராமனும் காளிதாஸனின் இஷ்டதேவதையும் வெவ்வேறு. நமது ஸ்வாமியிடம் அவ்வித வித்தியாஸமில்லை. இவருக்கு இரண்டும் கண்ணனெனும் ஒன்றே.

(4) இங்கு வணங்கப்படும் धाम என்ற சொல்லுக்கு நான்கு விசேஷணங்கள் கொடுக்கப்பட்டுள்ளன - वृन्दावनचरं, वल्लवीजनवल्लभं, जयन्तीसंभवं, वैजयन्तीविभूषणं என்று க்ருஷ்ணனின் பெயரைச்சொல்லாமலே அவை அவரைக் குறிப்பது கவியின் சாதுர்யம்.

(5) இந்த நான்கு விசேஷணங்களும் திருவாய்மொழி 6-10-10ல் அருளப்பட்ட வாத்ஸல்யம் ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஸ்வாமித்வம் என்ற குணங்களைக் குறிக்கின்றன. 1. வ்ருந்தாவனத்தில் கன்றுகளை மேய்த்ததால் வாயில்லா ஜீவன்களிடமும் கண்ணனுக்குள்ள வாத்ஸல்யம் அலலது அன்பு வெளியாகிறது. 2. லக்ஷ்மி பதியானவன இடக்கை வலக்கையறியாத கோபிகளுக்கு எளியவனாகவும் அன்பனாகவும் ஆனது அவனது ஸௌசீல்யத்தைக் குறிக்கிறது. 3. ஜயந்தியில் அவதரித்தது, ~~அவதா~~ரம் என்பதே, ஸௌலப்யத்தைக் காட்டுகிறது. 4. வைஜயந்தீ மாலை அணிந்திருப்பது ஸகலலோக நாயகன் என்ற ஸ்வாமித்வத்தை ஸூசிக்கிறது. இருபத்து மூன்றும் ஸர்க்கத்தில் பல ச்லோகங்களில் கண்ணனின் ஸௌசீல்யத்தை தேசிகன் விளக்கியுள்ளனர். (ச்லோ. 11,13, 18, 21, 22, 23.)

(6) இந்த நான்கு குணங்களை இங்கு ஸூசிப்பதின் பயன் பக்தர்களின் நான்குவித பயங்களைப்போக்குவதாகும். அவை யாவன 1. செய்த பாபங்களுக்கு தண்டிப்பார் என்னும் பயம்; 2. உயர்ந்தவராகை

## இரண்டு வகை தேகங்கள்

தேகமாகவது இரண்டு வகைப்படும். அவை ஸ்தூல தேகம் என்றும் ஸூக்ஷ்ம தேகம் என்றும் கூறுவர்.

**ஸ்தூல தேகமாவது:** பூமி, நீர், காற்று, தீ, ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களினுடைய சேர்க்கையால் பரிணமித்ததாய் இந்திரியங்களுக்கு இருப்பிடமாய் தோல், இரத்தம், மாம்சம், நிணம், எலும்பு, நரம்பு, சுக்லம் என்னும் ஏழு தாதுக்களும் எழுபத்தீராயிரம் நாடிகளும் கூடி இருக்கிற உருவ உடம்புக்கு ஸ்தூல தேகம் என்று பெயர்.

**ஸூக்ஷ்ம தேகமாவது:** மநம், புத்தி, அஹங்காரம், சித்தம் என்னும் அந்த:கரண சதுஷ்டயங்களும், ப்ராணுதி பஞ்ச வாயுக்களும் கூடிய ஸூக்ஷ்ம பூதங்களாகிய சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் தந்மாத்திரைகள் ஐந்தாலும் கற்பத்தின் முதலில் உண்டாக்கப்பட்டு ஆத்மாக்கள் கர்த்துக்கு ஈடாக எய்தும் ஒவ்வொரு பிறப்பின் ஆயுள் முடிவில் முன் உடம்பு விட்டு மற்றொரு சரீரம் எடுப்பதற்கும் ஏதுவாய் மோக்ஷ, ப்ரளய பர்யந்தம் அழியாது இருக்கும் அரு உடம்பாம் இதற்கு ஸூக்ஷ்ம தேகம் என்று பெயர்.

**திரு. ஜி. இலட்சுமணன் - சேடப்பாளையம்**

யால் அணுகமுடியாத என்ற பயம்; 3. மேம்பட்ட இறைவன் ஆகையால்' அடைய முடியாத வர் என்ற பயம்; 4. நமக்கும் அவருக்கும் ஒருவித தொடர்பும் இல்லை என்ற பயம்.

(7) वृन्दावनचरं என்ற முதல் அடைமொழியினால் கவி ஸ்ரீவிஷ்ணு புராணத்தை (5-6-28, 29) நினைவுபடுத்துகிறார். பசுக்களின் வ்ருத்தியை விரும்பும் தனது சுபமான ஸங்கல்பத்தினால் க்ருஷ்ணன் வ்ருந்தாவனம் என்ற காட்டை கோடையிலும் பசும்புல் பொருந்தியதாக ஆக்கினார் என்றவை அந்தச்லோகங்கள். யாதவாப்யுதயத்திலும் 4-40ல் குறிக்கப்படுகிறது.

(8) ச்ரவண பஹுள அஷ்டமியுடன் ரோஹிணி நக்ஷத்திரம் சேரும் நன்னாளுக்கு ஜயந்தீ என்று பெயர். அது மிகவும் புண்யமான தினம். அப்போது ஐந்து க்ரஹங்களில் உச்சத்திலிருந்தன என்று தேசிகன் 2-96ல் ஸாதிக்கிறார் மற்றவர்களின் பிறந்த தினங்களை தற்காலத்தில் ஜயந்தீ என்று கூறுவது உபசாரவழக்கே.

(9) ஜயந்தீ என்பது பக்தியுடன் கொண்டாடுபவர்களுக்கு ஜயத்தையும புண்யத்தையும் கொடுக்கிறது என்பதையும் காட்டுகிறது.

(10) ஒருவரின் வாழ்க்கையில் பிறப்பே முதல் நிகழ்ச்சியாயிருந்தாலும் जयन्तीसंभवं என்பதை தேசிகன் முதலில் வைக்காமல் மூன்றுவதாக அமைத்துள்ளார். இதன் காரணம் வ்ருந்தாவனத்தில் ஸஞ்சரிக்க வேண்டும், கோபீவல்லபனாக வேண்டும் என்ற ஸங்கல்பத்தினால் ஜயந்தீயில் அவதரித்தார் என்று காட்டுவதாம்.

(11) धाम என்பது கண்ணனின் திருவடியையும் குறிக்கும். அவருக்குக் கொடுத்திருக்கும் நான்கு அடைமொழிகளும் அவருடைய திருவடிக்கும் மிகவும் பொருத்தமாக அமைகின்றன. 1. திருவடியும் வ்ருந்தாவனத்தில் ஸஞ்சரித்தது; 2. கோபிகளுக்கு மிகவும் விரும்பத்தக்கதாக இருந்தது. (ஸ்ரீமத் பாகவதம் 10-31-7,19) 3. அதன் அவதாரமும் ஜயந்தீயில்தான்; 4. திருவடியிலும் வைஜயந்தீ, அதாவது கொடி, ரேகை ரூபத்தில் சங்கு, சக்கரம் முதலியவற்றுடன்கூட உள்ளது. (ஸ்தோத்ர ரத்னம் 31).

(12) கண்ணனின் திருவடி ஒளி பொருந்தியது என்று கூறுவதன் மூலம் திருவாய்மொழி முதல் பாசுரத்தில் அருளப்பட்ட 'சுடரடி'யை ஞாபகப்படுத்துகிறது.

(13) धाम என்பது எம்பெருமானின் உறைவிடமான பரமபதத்தையும் குறிக்கும். பரமபதம் என்ற சொல்லுக்கு ஸ்ரீபாஷ்யக்காரர் வேதார்த்த ஸங்க்ரஹத்தில் அருளிய மூன்று பொருள்களும் நமக்கு ஞாபகத்துக்கு வருகின்றன.

(14) 2-2ல் ஸ்வாமி தேசிகன் தேவகியின் கர்ப்பத்திலுள்ள கண்ணனை வர்ணிக்கும் போது ச்ருங்கார, வீர, அத்புத ரஸங்களின் சேர்க்கை போலிருந்தார் என்று அருள்கிறார். அதாவது க்ருஷ்ணனின் அவதாரம் இந்த ரஸங்களை முக்கியமாகக் கொண்டது என்பதை சமத்காரமாகக் கூறியபடி, இந்த மூன்று ரஸங்களே முதல் ச்லோகத்திலும் காட்டப்பட்டுள்ளன. वल्लवीजनवल्लभं என்பதால் கோபிகளுக்கு அன்பன் என்று ச்ருங்கார ரஸத்தையும், जयन्तीसंभवं என்பதில் ஜயசப்தத்தால் வீரத்தையும், वृन्दावनचरं என்பதால் வ்ருந்தாவனத்தில் ஸஞ்சரிக்கும் போது கண்ணன் செய்த அத்புத செயல்களையும் காட்டியருளியபடி.

(15) கவிமரபின்படி சிறந்த கவி தனது ஆரம்ப ச்லோகத்திலேயே தாம் இயற்றும் காவ்யத்தின் ஸாராம்சத்தைச் சுருக்கமாகக் காண்பிக்க வேணும். அதற்கிணங்க இங்கே जयन्तीसंभवं என்பதால் க்ருஷ்ணனின் அவதாரமும் அவர் கோகுலம் செல்வதும் वृन्दावनचरं என்பதால் மதுரை செல்லும் வரை ஆனிரை மேய்த்ததும், वल्लवीजनवल्लभं என்பதால் பல மஹிஷிகளுக்குப் ப்ரியனாக இருந்ததும், वैजयन्ती विभूषणं என்பதால் தன்னுடைய பரத்வத்தினால் பாரதம் கை செய்து பூபாரம் குறைத்ததும் காண்பிக்கப்பட்டனவாகின்றன.

இது போல் பல அரிய பெரிய விஷயங்கள் வேதாந்த தேசிகனின் திவ்ய ஸூக்திகளில் பொதிந்து கிடக்கின்றன. இவர் தாமே கூறியபடி (20-4-8) இதை अन्तर्वर्तीसूक्ति என்றே கூறலாம்.

क्रीडातूलिकया स्वस्मिन्
कृपारूषितया स्वयम् ।
एको विश्वमिदं चित्रं विभुः
सीमानजीजनत् ॥(१-९)

"ஸ்ரீமானும் ஸர்வசக்தனுமான பகவான் தயை என்னும்

மசியில் நினைக்கப்பட்ட லீலை என்னும் எழுது கோலால் தன்னுள்ளேயே ஸ்வேச்சையினால் இந்த ஆச்சர்யமான உலக ஓவியத்தைத் தீட்டினார்".

இந்தச் ச்லோகத்தில் கவி தாம் காணும் இந்த ஆச்சர்யமான பலரகப்பட்ட அளவிட முடியாத உலகத்தை ஓர் ஓவியமாகக் கற்பனை செய்கிறார். இதை எழுதிய ஓவியன் ஸர்வேச்வரனைத் தவிர வேறு யாருமல்ல. அவன் எப்போதும் மஹாலக்ஷ்மியுடன் சேர்ந்தே பிரிக்க முடியாமலிருப்பவன். அவன் புருஷஸூக்தத்தில் ह्रीश्च ते लक्ष्मिश्च पत्न्यौ என்று ஓதப்பட்ட ஸ்ரீபூமி நாயகன். அவன் இவ்வுலகத்தை ஒரு வித உதவியுமின்றித் தானாகவே உண்டுபண்ணுகிறான். அவன் எழுதிய சித்திரம் உண்மையிலேயே விசித்திரமானது. லீலா ரஸம் அவனுக்கு எழுதுகோலாகவும் தயை அதற்கு வேண்டிய வர்ணமாகவும் உள்ளன. ஒருவரால் உத்திரவிட்டு எழுதப்பட்ட ஓவியமன்று இது. தன்னிச்சையாலே தனது ஆனந்தத்திற்காக எழுதப்பட்டது. ஓவியம் எழுத உபயோகப்படும் சீலையும் அந்தப் பகவானேதான், ஏனெனில் ஸ்ருஷ்டிக்கு முன் எம்பெருமானைத் தவிர வேறொன்றுமிருக்கவில்லை என்று உபநிஷத்துக்கள் ஓதுகின்றன.

உலக அநுபவத்தில் நாம் காரணகார்யங்களை வெவ்வேறாகக் காண்கிறோம். உதாஹரணமாக, ஓர் பானையை எடுத்துக்கொண்டால் அதன் உபாதான காரணம் களிமண், நிமித்த காரணம் குயவன், ஸஹகாரி காரணங்கள் அவனுடைய தண்டு, சக்கரம் ஆகியவை. பகவான் விஷயத்திலோவென்றால், அவர் ஸகல சக்தியுடையவராகையால் அவரே மூன்று வித காரணமுமாகிறார். நாம் அவ்விதம் எங்கும் காணாதலால் அது எப்படியிருக்கும் என்று ஐயப்படாமலிருக்க விபு என்ற பதத்தை உபயோகித்துக் கவி நமக்கு ச்வேதாச்வதர உபநிஷத்தில் பகவானுக்கு ஸ்வபாவத்திலேயே விசித்ரமான ஜ்ஞானம், பலம், செயல்படும் சக்தி ஆகியவைகள் உள்ளன என்று கூறியிருப்பதை எடுத்துக்காட்டுகிறார்.

விசிஷ்டாத்வைதத்தின்படி ஸ்ருஷ்டிக்கு முன் ப்ரஹ்மம் ஒன்றே ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்டமாக இருந்தது. அதாவது சேதநா சேதநங்கள் நாமரூபங்களால் பிரித்தறிய முடியாதபடி எம்பெருமானிடம் ஒன்றி ஒருங்கியிருந்தன. ஸ்ருஷ்டிக்குப் பிறகு ப்ரஹ்மம் ஸ்தூல சிதசித் விசிஷ்டமாகிறது. அதாவது சேதநா சேதநங்கள் நாமரூபங்களால் அறியும்படி ஆகின்றன. ஆயினும் பகவான் அவற்றின் அந்தர்யாமியாக இருப்பதால் அவனை விட்டுப் பிரியாமலுமுள்ளன (17-108ம் காண்க). ஆக, ப்ரஹ்மம் ஒன்றே முக்காரணமாகிறது தன்னுள் நாம ரூப அர்ஹதையற்றுக் கிடந்த சேதநாசேதந உலகத்தைக் கொண்டு உபாதான காரணமாகவும், தனது ஸ்ருஷ்டி ஸங்கல்பத்தால் நிமித்த காரணமாகவும் தனது லீலை, தயை ஆகியவற்றின் மூலம் ஸஹகாரி காரணமாகவும் ஆகின்றது. ஆக ஒரே ப்ரஹ்மம் தனது இச்சையினால் தன்னைப் பலவாக்கிக்கொள்கிறது. (தை. உப. 2-7-1; யாதவா 17-108) இந்த எல்லா பொருள்களும் ஸ்வயம், ஸ்வஸ்மின், ஏக: என்ற எளிய, சிறிய சப்தங்கள் மூலம் கவி வெளியிட்டுள்ளது ஆச்சரியம்.


ஸ்ரீவரதராஜப்பெருமான் கோயில் - காஞ்சி.
-கமலா மாரியப்பன் - கோவை.

அவாப்த ஸமஸ்த காமனான பகவானுக்கு ஸ்ருஷ்டியால் யாது பயன்? மந்த புத்தியுள்ளவனும் ஓர் பயனைக் குறிக்காமல் கார்யம் செய்வதில்லையாகையால், ஸர்வஜ்ஞனான பகவானைப் பற்றிக்கூறவும் வேண்டுமா? ஏதாவது ப்ரயோஜனம் அவச்யம் இருந்தே தீரும். அதுயாது? இதற்குப்பதில் கேவலம் லீலை என்கிறார் ஆசிரியர். உலகம் முழுவதையும் ஆளும் சக்ரவர்த்தி ஸார்வபௌமனும் தன் ஆனந்தத்துக்காக

பல கேளிக்கைகளில் ஈடுபடுகி ருனல்லவா? (24-32 காண்க). ப்ரஹமஸூத்ரம் 2-1-33, மற்றும் மஹாபாரதம் ஸபா பர்வம் 90-31, ஸ்ரீவிஷ்ணு புராணம் 1-12-18, வாயுபுராணம் 36-69 முதலிய ப்ரமாணங்கள் இதை வலியுறுத்துகின்றன.

விஷமமும் துக்கமும் நிறைந்த உலக ஸ்ருஷ்டி பகவானின் நிர்தயையும் பக்ஷபாதத்தையும் காண்பிக்கவில்லையா என்ருல், இல்லை. ஏனெனில் அவன் ஜீவர்களின் கர்மங்களுக்கு அநு குணமாகவே பலனளிக்கிருன். ஒரே பூமியில் வெவ்வேறு பயிர் கள் விளைவது போல் பகவான் ஸாதாரண காரணம் (1-50). அந்தந்த விதைகள் அந்தந்த பயிர்களுக்கு முக்ய காரணம். அதே போல் ஜீவர்களின் கர் மங்களே அவர்களில் காணப்ப டும் வித்யாஸங்களுக்கு மூல காரணம் (அதிகரண ஸாராவளீ 237, ப்ரஹ்மஸூத்ரம் 2-1-34).

லீலையினால் ஏற்படடாலும் ஸ்ருஷ்டி உண்மையில் தயை யின் கார்யமே. (தயாசதகம் 17) அது ஜீவர்களுக்கு மோக்ஷம டைய வாய்ப்பு அளிப்பதால். அப்படியாயின் அதே தயையி னால் பகவான் நமக்கு ஏன் மோக்ஷம் கொடுக்கக் கூடாது? கொடுக்கமாட்டார். ஏனெ னில் அப்போது யாவ ருக்கும் மோக்ஷம் கொடுக்கும் நிலைஏற்படும்; மேலும் கர்மத் தின் நியதிகுலையும் (திருவாய் மொழி 4-10-6). ஆகவே க்ரு பைக்கும் கரமத்துக்கும் நடுநி லைமை வகுத்து தயைக்கும், லீலைக்கும் வாய்ப்பு கொடுக்க வேண்டியது அவச்யமாகிறது. ஆகவே, பகவானின் கரு ணையினால் ஏற்பட்ட சாஸ் திரங்களில் கூறிய வழிகளைக் கடைப்பிடிக்கிறவர்களுக்கு மட் டுமே மோக்ஷம் கிட்டும். (22-12)

லீலையை எழுதுகோலாகவும் தயயை வர்ணமாகவும் அமைத் திருப்பது ஊன்றி நோக் கத்தக்கது. இதை மாற்றி யிருந்தாலும் ச்லோகம் சரியா கவே அமைந்திருக்கும். இதன் பின் ஓர் அரிய கருத்துள்ளது. அதாவது நாம் ஓவியத்தைக் காணும் போது அதை எழு தினவனையோ அவனது எழு துகோலையோ காண்பதில்லை. அவனால் தீட்டப்பட்ட வர் ணம் மட்டும் நம்முன் தோன்றி நமக்கு மகிழ்ச்சியை உண்டுபண் ணுகிறது. ஆகவே, லீலை கார ணமாயிருந்த போதிலும், நாம் பகவானின் தயையை மட்டும் நேரில் காணவேண்டும், லீலை என்பதை ஊஹத்தால் மட்டும் அறியவேண்டும் என்பது எம் பெருமானின் திருவுள்ளம்.

(அடுத்த இதழில் முடியும்



(3 -ஆம் பக்கத் தொடர்ச்சி)

இவ் அனுபவங்களையெல்லாம் அண்மையில் வடஇந்தியாவில் உத்திரபிரதேச மாநில உத்திர காசி மக்கள் பெறத்தான் செய்தார்கள். அமெரிக்கா, ஈரான், சைனா, எகிப்து போன்ற பல நாடுகள் பலமுறை நிலநடுக்கம் எனும் பூகம்பத்தால் பாதிக்கப்பட்டதை அறிந் தும், பார்த்தும் இருந்த இம்மண்ணின் இத்தலைமுறையினர் தம் தாய் திருநாட்டின் ஒரு பகுதியில் பூகம்பத்தால் ஆயிரக்கணக்கான மக்கள் உயிர் பலியானதும் உடமைகள், உற வினர்கள் இழந்ததும் கண்டு அதிர்ச்சிக்குள்ளானார்கள். மரணம் தடுக்கமுடியாததுதான். ஆனால் அதனைத் தழுவும்வகை மிகவும் பரிதாபகரமாக அமையுமானால், மனிதன் அமை தியுடன் தன் ஆயுளைக் கடக்கமுடியாது.

இயற்கையின் கடுஞ்சீற்றத்தினால் மனிதனின் முயற்சிகள் பயனற்றுப் போகும் போது, அவனுக்கு ஆறுதல் வழங்குவன அவன் வழிபடும் சமயமும், மற்ருெரு மனிதனின் அன்பு நெஞ்சமும்தான். எனவே நிலநடுக்கம் போன்ற இயற்கையின் சீற்றத்திற்கு மனி தனின் நடவடிக்கைகள் மறைமுகமாக அமையுமானால், அவற்றை இன்ருவது எண்ணி, தன்னைத் திருத்திக்கொண்டு, இதுபோன்ற பேரழிவுகளின்போது, மனிதன் மற்றைய உயிர் களைக் காட்டிலும் மேலானவன் என்பதைத் தன் அன்பு, தியாகம், தொண்டு ஆகிய பண்புக்கூறுகளைக் கொண்டு நிரூபிப்பானாகில், அதுவே நிலநடுக்கத்தால் உத்திரகாசியில் மரணமடைந்த உயிர்களுக்கு நாம் செலுத்திடும் நினைவஞ்சலிகளாக அமையும்.

Edited and Published on behalf of the T.T. Devasthanams by K. Subba Rao, M.A, and printed at T.T.D Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati-517 507.

